# தமிழா? அமிழ்தா?

கட்டுரைத் தொகுதி



கவிவேந்தர்

கா.வேழவேந்தன் பி.ஏ.,பி.எல்.,

# தமிழா? அமிழ்தா?

(இலக்கியச்சுவைக் கட்டுரைத் தொகுப்பு)

ஆக்கம் :

கவிவேந்தர் கா. வேழவேந்தன், பி.ஏ., பி.எல்.,



வேந்தர் பதிப்பகம்

78/103, டாக்டர் இராதா கிருட்டினன் சாலை,
மயிலாப்பூர், சென்னை – 600 004.

தொலைபேசி : 8475976.

# உள்ளே...

எண். பக்கம்

**மு. கருணாநிதி**
முதலமைச்சர்

அரசு தலைமைச் செயலகம்,
தமிழ்நாடு,
சென்னை–9.
9–4–'70

# அணிந்துரை

தமிழகத்தின் தொழிலாளர் நலத்துறை அமைச்சராகப் பொறுப்பேற்றுள்ளவரும், **எங்கள் குடும்பத்தின் இளந்தலைமுறைக் கவிஞர்களில் சிறந்தவருமான நண்பர் மாண்புமிகு கா. வேழவேந்தன் அவர்கள்** அவ்வப்போது பற்பல ஏடுகளில் தீட்டி வந்த 19 இலக்கியக் கட்டுரைகளின் தொகுப்பே **'தமிழா? அமிழ்தா?'** என்ற பெயரில் இன்று நூல் வடிவம் பெற்றுள்ளது.

புறநானூறு, திருக்குறள், நாலடியார், மணிமேகலை, தண்டியலங்காரம் போன்ற பழைய இலக்கியங்களிலிருந்து நயம் செறிந்த பாடல்கள் சிலவற்றைத் தேர்ந்தெடுத்துச் சுவைபட அவற்றுக்கு

விளக்கந் தந்துள்ளார் நம் கவிஞர். புரட்சிக் கவிஞரின் பாடலுக்கும் சிறப்புச் சேர்த்துள்ளார்.

தமிழர்களின் பண்புகளான காதல், வீரம், ஈகை, நகை போன்றவை இங்கே மிளிர்கின்றன. **'ஏன் அழவில்லை?'** என்ற கட்டுரை என் மனத்தை மிகவும் கவர்ந்தது.

**தமிழ் மக்கள் படித்துப் பயன்பெற்றிடத் தக்க அரிய நூல் இது. இதனைப் படைத்துள்ள கவிஞர் பாராட்டுக்குரியோராவார்.**

9/4/20

**இரா. நெடுஞ்செழியன்**
**கல்வி - நலத்துறை அமைச்சர்**

தமிழக அரசு
தலைமைச் செயலகம்,
சென்னை -9.
9.8.1970

# மதிப்புரை

**தமிழைத் தம் அறிவுத் திறனாலும், ஆற்றல் திறனாலும் அமிழ்தாக்கி, அந்த அமிழ்தை இந்த ஏட்டிலே படைத்து நமக்கு ஈந்து, 'தமிழா? அமிழ்தா?' என்ற வினாவை நம்மிடம் எழுப்புகிறார் கவிஞர் வேழவேந்தன் அவர்கள்.** நாம் அமிழ்தைச் சுவைக்கும் போது, அதில் தமிழ் கலந்திருப்பது நம் சிந்தைக்குப் புலப்படுவதில்லை. தமிழைச் சிந்தனையால் நுகரும் போது அதில் பொதிந்து கிடக்கும் அமிழ்து நமக்குத் தென்படுவதில்லை. தமிழைக் காணும்போது அமிழ்து மறைந்து விடுகிறது ; அமிழ்தைக் காணும்போது தமிழ் மறைந்து விடுகிறது. இரண்டும் ஒன்றையொன்று மறைத்துக்கொண்டு நிற்கின்றன. 'தமிழா? அமிழ்தா?' என்ற வினாவிற்கு, 'இரண்டும் கலந்த ஒன்று தான் இந்த நூல்' என்ற விடையை நாம்

அளிக்க வேண்டியவர்களாக இருக்கிறோம். **கவிஞர் வேழவேந்தன்** அவர்கள் சங்க கால இலக்கியத்திலிருந்து, புரட்சிக்கவிஞர் பாரதிதாசன் காலத்து இலக்கியம் வரையில் தோன்றியுள்ள இலக்கியப் பெருங்கடலில் மூழ்கி , ஒரு சில முத்துகளை எடுத்து, அவற்றில் சிப்பி ஓடுகளை நீக்கி, அவற்றுள் பொதிந்து கிடக்கும் அழகு ஒளியை நம் அறிவுக்கண் முன் வைக்கிறார் இந்த ஏட்டின் மூலம்.

**எளிதில் விளங்காத பாடல்களுக்குக் காட்சி விளக்கமும், கருத்து விளக்கமும் தந்து,எளியோரும் புரிந்து கொள்ளும் தன்மையில் அழகாக இந்த நூலை இயற்றியிருக்கிறார்.**

**கவிதைகளுக்குக் காட்சிகள் அமைத்துக் கொடுத்திருக்கும் பாங்கு மிகமிகப் பாராட்டுதற் குரியதாகும். கவிஞர் வேழவேந்தன் அவர்களின் சொல்நடையில், அழகுத் தமிழ் அடுக்கடுக்காக நீர் வீழ்ச்சிபோல் வீழ்ந்து குதித்தோடி, நம் நெஞ்சமெல்லாம் பரவி நின்று பெருமகிழ்வு ஊட்டும் என்பது யாவரும் அறிந்த ஒன்று. அவருடைய உரைநடையில் கவிதை நயங்கள் எப்படியெல்லாம் கொஞ்சுகின்றன என்பதை இந்நூலில் தெளிவாகக் கண்டு கொள்ளலாம்.**

அரிய கவிதைகளை மக்களுக்கு எளிதாக அறிமுகப்படுத்த அவர் கையாண்டிருக்கிற பாங்கு மிகமிகப் பாராட்டுதற்குரியது.

**கவிஞர் வேழவேந்தன் அவர்களின் கலை உள்ளம் என்றென்றும் வாழ்க! என்றென்றும் வெல்க!!**

ம.பொ.சிவஞானம்
எம்.எல்.ஏ.,

45, இருசப்ப கிராமணித் தெரு,
சென்னை–5.
12.5.1970

# முகவுரை

இந்நூலாசிரியர், தற்போது அமைச்சர் பதவியில் இருந்தாலும் தமிழ்த் தொண்டினை அவர் கைவிட வில்லை. மிகச் சிறந்த கவிஞரான அவர், அரசுப் பணிகளுக் கிடையேயும் என் போன்றவர்கள் வியக்கும் வண்ணம் தமிழ்மொழிக்குப் பணியாற்றி வருகிறார். **இவர் புனைந்த கவிதைகள் பலவற்றைப் படித்து பல்வேறு சமயங்களில் நான் இன்புற்றிருக்கிறேன். இவர் எதிர்காலத்தில் புகழ் மிக்க பெருங் கவிஞர்கள் வரிசையிலே வைத்து பெருமைப் படுத்தத் தக்கவராக ஆகிவிடுவார் என்ற நம்பிக்கை எனக்குண்டு.**

'தமிழா? அமிழ்தா?' என்னும் இந்நூல் பல கட்டுரைகளின் தொகுப்பாகும். இதிலே ஒவ்வொரு கட்டுரையும், ஒவ்வொரு கவிதைக்குரிய விளக்கமாகும். சங்க கால ஏடுகள் தொட்டு, நம் காலத்துக் கவிஞர்

சங்க கால ஏடுகள் தொட்டு, நம் காலத்துக் கவிஞர் பாரதிதாசன் படைத்த இலக்கியங்கள் வரை உலாவி, அவற்றிலிருந்து சுவைமிக்கப் பாக்களைத் தேர்ந்தெடுத்து நமக்கு விருந்து வைத்திருக்கிறார் **கவிஞர் வேழவேந்தன்**.

**ஒவ்வொரு கட்டுரையும் ஒவ்வொரு சுவையை நமக்கு வழங்குகின்றது. இந்நூல் உரை நடையில் அமைந்ததாயினும், வாசகங்கள் அமைந்துள்ள முறையிலே கவிதையோ என்று மயங்க வேண்டியிருக்கின்றது.** அவ்வளவு சுவையாக கவிஞர் வேழவேந்தனின் உரைநடை அமைந்திருக்கக் காண்கின்றோம்.

காதல், வீரம், கடமை, செங்கோன்மை, குடிமை, கொடை ஆகிய பல்வேறு பண்புகளைத் தொகுத்துத் தமிழ்த் தாய்க்குப் படைத்திருக்கிறார். அவரது திறன் போற்றத் தக்கது.

சங்க காலத் தமிழ் வேந்தர்களின் வீரசாகசங்களைக் கூறுங்கால், நம்மை அந்தக் காலத்துக்கே அழைத்துச் சென்று விடுகிறார் ஆசிரியர். ஆம், வருணிப்பதிலே அவருக்குள்ள திறமை, நாம் வாழுங்காலத்தையே மறக்கச்செய்து விடுகிறது.

இந்நூலை வெளியிட்ட தமிழ்த்தேன் பதிப்பகத்தார் அதிருஷ்டசாலிகள். அமைச்சராகவும், கவிஞராகவும் சட்ட அறிஞராகவும், மேடைப் பேச்சாளாராகவும், எதிர் காலத்தை நம்பிக்கையுடன் நோக்கும் இளைஞராகவும் உள்ள ஒருவருடைய படைப்பைப் பதிப்பிக்கும் பேறு இதற்குமுன் வேறு எந்தப் பதிப்பகத்திற்கும் கிடைத்த தில்லையல்லவா?

இந்நூலாசிரியருக்கு என்மனமுவந்த வாழ்த்துகள். இன்னும் பலநூல்களையும் படைக்க அவர் முன் வருவாராக.

தெ. பொ. மீனாட்சிசுந்தரம்
12-5-70

# நுழை வாயிலில்......

எந்தத் தமிழால் உருவானோமோ, எந்தத் தமிழால் உலகத்தை உணர்ந்து கொண்டோமோ, எந்தத் தமிழைப் பேசி உயிர் வாழ்கிறோமோ, அந்தத் தாய்த் தமிழ் இலக்கியத்தில் 'என்னதான் இருக்கிறது?' என்று கேட்கும் ஒருசில பிறவிகளும், அதே தமிழன்னையின் வயிற்றிலே பிறந்தவர்களாகத்தான் இருக்கிறார்கள்.

**'தமிழா? அமிழ்தா?'** அத்தகையவர்களுக்குத் தகுந்த விடைகூற எழுதப்பட்ட நூலாகும்.

ஆயிரமாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் தமிழிலக்கியச் சோலையிலே மலர்ந்த பூக்கள், கால காலத்திற்கும் அழியாமல் மணம் தந்து கொண்டிருக்கின்றன என்பதற்குச் சான்றுதான் இந்தச் சின்னஞ்சிறிய நூல்.

நீண்ட பயணம் சென்று திரும்பும் போது, வழியில் கண்ட காட்சிகள் எல்லாம் மறந்துபோகுமே என்பதற்காகத்தான், அவற்றில் சிலவற்றைப் புகைப்படமாக எடுத்து வைத்துக் கொள்கிறோம்.

அதைப்போல, நான் சுவைத்துச் சுவைத்துப் படித்த பல்வேறு தமிழிலக்கிய நூல்களில் என் நெஞ்சிலே பதிந்து

விட்ட சில பாடல்கள் என்றென்றும் மின்னலிட்டுக் கொண்டேயிருந்தன. அந்த அற்புதமான பாடல்களைப் பாடிய கவிஞர்கள் எந்தச் சூழ்நிலையில், எந்த நெஞ்சுணர்வோடு, அவற்றை எழுதியிருப்பார்கள் என்பதை நான் என்னுடைய நடையிலே கற்பனை செய்திருக்கிறேன்.

**இந்த நூலைப் படித்து முடித்து மூடும்போது, நாம் எத்தகைய வரலாற்றுக்கும் பாரம்பரியத்திற்கும் சொந்தக் காரர்கள் என்ற பெருமிதம் உருவாக வேண்டும் என்பது தான் என்னுடைய தாழ்மையான அவா!**

பரந்திருக்கும் இந்த உலகில் பெருவாரியான மக்கள் பேசுகின்ற மொழிகள் பல இருக்கலாம். ஆனால் அந்த மொழிகளில் எல்லாம் இத்தகைய பண்பாட்டு இலக்கியங்கள் பல நூற்றாண்டுகளுக்கு முன்னால் முகிழ்த்ததா என்பது ஐயப்பாடுதான்.

மலர்களிலே மனோரஞ்சித மலர், வடிவத்தில் சூரிய காந்தியைப்போல, பெரிதாக இல்லாமலிருக்கலாம்; ஆனால் வாடாத மணத்தை மனோரஞ்சிதம் தரும் அளவுக்குச் சூரியகாந்தி தருவதுண்டா?

கனிகளிலே முந்திரிக் கனி கிளையின் வெளியே நீண்டு, வழியிலே போவோர் வருவோரை ஈர்க்கலாம். ஆனால், வேர்ப்பலாக்கனியுள் ஒளிந்து கிடக்கும் சுவைச்சுளைகளிடத்தில் காணப்படும் கற்கண்டின் இனிமை முந்திரிக்கு வருவதுண்டா?

நானூற்றைம்பது கோடி மக்கள் வாழும் உலகத்தில், நாலரைக் கோடி தமிழர்களின் நாவிலே தவழும் தமிழ், வையகத்தின் பல்வேறு பகுதி மக்கள் காட்டுமிராண்டி களாய் வாழ்ந்த போது, வாழ்க்கையில் மனிதன் கடைப்பிடிக்க வேண்டிய மிகப்பெரும் பண்பாடுகளை வைரக் கவிதைகளாக வடித்துத் தந்திருக்கிறது.

'ஒருத்திக்கு ஒருவன், ஒருவனுக்கு ஒருத்தி' என்ற காதல் பண்பாட்டையும், 'உறைவாள் நெஞ்சிலே பட்டு முதுகிலே ஊடுருவி விடுமானால், அது கறை படிந்த படை மடம்' என்ற வீரப் பண்பாட்டையும், 'கணவனை இழந்த காரிகையர்க்கு அவனோடு ஒப்பிட்டுக் காட்டும் உறவின் முறை வேறு இல்லை' என்ற இல்லறப் பண்பாட்டையும், 'முல்லைக் கொடி ஒன்று படர தன் கோலத் தேரையே கொடையாகக் கொடுத்த' அறப் பண்பாட்டையும், என்றோ வாழ்ந்த தென்றமிழ்க் கவிஞர்கள் எத்தனை எத்தனை எழிலோடு எடுத்துச்

சொல்லி, எதிர்காலத் தலைமுறையினரின் நெஞ்சிலே முத்திரையாகப் பதித்துவிட்டுச் சென்றிருக்கிறார்கள் என்பதை எடுத்துக் காட்ட முனைந்திருக்கிறேன்.

**சுழலும் இந்த வையகத்தில் அமெரிக்க நாடு செல்வவளம் படைத்ததாக இருக்கலாம்.**

**உருசிய நாடு நிலவுக்குக் குடியேறும் ஆற்றல் பெற்ற அறிவியல் வளம் படைத்ததாக இருக்கலாம்.**

**சப்பான் நாடு உலகத்திற்கெல்லாம் ஒப்பற்ற இயந்திரங்களைப் படைத்துத் தரும் தொழில் வளம் மிக்கதாக இருக்கலாம்.**

**இங்கிலாந்து நாடு உலகம் போற்றும் குடியாட்சி வளம் நிறைந்ததாக மிளிரலாம்.**

**ஆனால், தமிழ்நாட்டார் வையகத்திற்கே பண்பாட்டு வளத்தை வழங்கும் வான்புகழ் பெற்றவர் என்பதைத் தக்கச் சான்றுடன் இந்தச் சிறுநூல் மூலம் விளக்க முனைந்திருக்கிறேன்.**

நரையும் திரையும் கொண்ட முதிர்ந்த கிழவன் கூட, தன் இளமை வயதிலே வரையப்பட்ட முறுக்கு மீசையுடன் இருக்கும் ஓவியத்தைக் காணும்போது புத்துணர்வு பெறுவான் அல்லவா?

நம் பாட்டன்மாருக்குப் பாட்டன்மார் எப்படி யெல்லாம் வண்மையோடும் திண்மையோடும் கோலா கலத்துடன் வாழ்ந்து காட்டினார்கள் என்பதற்கு நம் இலக்கிய ஏடுகள் அல்லவா காலக்கண்ணாடிகளாய்க் காட்சி தருகின்றன?

அரசியலில் என்னை ஆளாக்கிவிட்ட **அறிஞர் அண்ணா**வுக்குப் பின்னர், என்னையும் அமைச்சரவை யிலே ஓர் அங்கமாக்கிய, நான் கண்ட கலங்கரை விளக்கமான **தலைவர் கலைஞர்** அவர்கள் இந்த நூலை முழுக்கமுழுக்கப்படித்துப் பார்த்து, மிகமிகச் சிறப்பான அணிந்துரை வழங்கியிருக்கிறார்கள். நாள் ஒன்றுக்கு நாற்பது மணிநேரம் இருந்தாலும் போதாது என்று நாடெல்லாம் சுற்றிச் சுழன்றுவரும் **தமிழக முதல்வர் கலைஞர்** அவர்களின் அணிந்துரைதான் இந்த நூல் என்னும் கோபுரத்தின் கலசமாக மிளிர்கிறது. புதிய வரலாறுகளைப் படைத்துக் கொண்டிருக்கும் பொன்னான மனம் படைத்த கலைஞர் அவர்களுக்கு நான் என்றென்றும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறேன்.

நாடு போற்றும் நடமாடும் பல்கலைக் கழகம் **கல்வி அமைச்சர் நாவலர்** அவர்கள், தமக்கே உரித்தான ஈடு எடுப்பற்ற நடையில் அழகான முன்னுரை தந்து என்னை

மிகமிக ஊக்கப்படுத்தியிருக்கிறார்கள். நான் தத்தித் தத்திக் கவிதைபாடிய அந்தக் காலத்திலேயே தட்டிக் கொடுத்து ஆளாக்கிய நாவலர் அவர்களுக்கு என் உளமார்ந்த நன்றியறிதலை எப்போதும் செலுத்தக் கடமைப்பட்டிருக் கிறேன்.

சிலம்புச் செல்வர் **ம.பொ.சி.** அவர்கள் சீரியதோர் முகவுரை வழங்கி நூலுக்குச் சிறப்பைச் சேர்த்திருக் கிறார்கள். நம் நெஞ்சிருக்கும்வரை நினைவிருக்கும் வண்ணம் நற்றமிழ்த் தொண்டாற்றி வரும் சிலம்புச் செல்வர் அவர்களுக்கு என் நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

உதிர்ந்த பூக்களை ஒன்றாகச் சேர்த்துக் கட்டும் சிறப்பான பணியைச் செம்மையாகச் செய்திருக்கும் **'தமிழ்த் தேன்'** நிறுவனத்திற்கும், என் அருமை நண்பர் **திரு. எம். கே. இராசசேகரன்** அவர்களுக்கும் என் நன்றியறிதலை அன்புடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

இனி பக்கங்களைத் திருப்புங்கள். இதயம் தரும் முடிவை எழுதுங்கள். வெல்க அன்னைத் தமிழ்!

அ. வேலுச்சாமி

# என்னுரை

''திங்களொடும், செழும்பரிதி தன்னோடும்,
விண்ணோடும், உடுக்களோடும்,
மங்குகடல் இவற்றோடும் பிறந்ததமிழ்
உடன்பிறந்தோம் நாங்கள், ஆண்மைச்
சிங்கத்தின் கூட்டமென்றே சிறியோர்க்கு
ஞாபகம் செய்! முழங்கு சங்கே!''

என்று கர்வத்தோடும் கம்பீரத்தோடும் முழங்கினார் பாவேந்தர் பாரதிதாசன்.

**'அமிழ்து'** என்பதன் மரூஉதான் **'தமிழ்'** என ஆயிற்று என்று ஆய்ந்தறிந்த மொழி அறிஞர்கள் கூறியுள்ளனர்.

'தேனுறை தமிழ்', 'தமிழ் எனும் தீஞ்சொல் தையல்', 'தமிழின் ஒழுகு அருஞ்சுவையே' போன்ற தித்திக்கும் தொடர்களால் தமிழ்ப்பாவாணர்கள், தமிழ் மொழியின் அளப்பரிய இனிமையை வானளாவப் போற்றியிருக்கிறார்கள்.

சுழன்று கொண்டே இருக்கும் இந்தப்பூமிக் கோளத்தின் மீது வாழும் அறுநூறு கோடி மக்கள் ஏறத்தாழ மூவாயிரம் மொழிகளைப் பேசுகின்றனர். அவற்றில் இன்னமும் சில மொழிகளுக்கு உரிய எழுத்தும் இலக்கணமும் அமையவே இல்லை!

ஆனால் கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே தோன்றிய தொன்மை மொழிதான் 'தமிழ்' என்பதற்கோர் ஆணித்தரமான ஆதாரம் உண்டென்றால், அந்த அன்னைத் தமிழின் மடியில் மின்னிக்கொண்டிருக்கும் அற்புத இலக்கியச் செல்வங்களே என்போம்.

தமிழ்மொழி பெற்றிருக்கும் பதினாறு தனிப்பெருமைகளை அருமையாகப் பட்டியலிடுகிறார் நம் பாவாணர் பெருமகனார் அவர்கள். அவை என்னென்ன?

'தொன்மை, முன்மை, மேன்மை, எண்மை, ஒண்மை, வண்மை, தாய்மை, தூய்மை, செம்மை, மும்மை, தனிமை, இனிமை, பெருமை, திருமை, இயன்மை, வியன்மை'

அடடா! தமிழன்னையின் விழிகளில் மின்னும் இந்தப் பதினாறு 'மை'களின் அணிவகுப்பைக்கண்டு உலக மொழிவாணர்கள் மூக்கின் மேல் விரல் வைத்து வியந்து நிற்கிறார்கள்.

பழந்தமிழில் மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே தோன்றியதுதான் நம் தொல்காப்பிய இலக்கணப் பனுவல்.

அந்தத் தொன்மைப் பெரு நூலின் பல இடங்களில் 'என்மனார் புலவர்', 'என்ப', 'மொழிப', என வரும் தொடர்களால், அதற்கும் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே, நம் சீரிளந் தமிழ்மொழி தழைத்துச் செழித்து வளர்ந்தோங்கி நின்றிருக்கிறது என்பது தெளிவாகப் புலனாகின்றது.

அங்ஙனம் பல்லாயிரம் ஆண்டுகளாய் ஓலைச்சுவடிகளின் உருவத்திலே வடித்தெடுக்கப்பட்ட பலநூறு தமிழ்ப் பாவாணர்கள் தீட்டிய அந்த அற்புத எழுத்துப் படையல்கள் அனைத்தும் நமக்குக் கிட்டிற்றா?

**பொங்கி எழுந்த கடல்கோள்களாலும், புனல் மண்டிய ஆடிப்பெருக்குகளாலும், பொறாமைப்பேய்**

பிடித்த சமய வெறியர்களாலும், பொசுக்கித்தீர்த்த தீ நாக்குகளாலும், புசித்து ஏப்பம்விட்ட பாழும் கறையான்களாலும் அழிந்த நூல்கள் எத்தனை எத்தனையோ?

இப்படிக் கால வெள்ளத்தின் கோரப்பிடியில் இருந்து தப்பி, நம் கைகளில் எஞ்சியுள்ள எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, ஐம்பெருங் காப்பியங்கள், ஐஞ்சிறு காப்பியங்கள், பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள், கலம்பகங்கள், அந்தாதிகள், பரணிகள், கோவைகள், உலாக்கள், தூது நூல்கள், தனிப்பாடல்கள், சித்தர்பாடல்கள், தலப்பாடல்கள், அகவல்கள், நிகண்டுகள், சதகங்கள், பிள்ளைத்தமிழ்ப்பாடல்கள் ஆகியவை எல்லாம் நமக்கு அள்ளி அள்ளி வழங்கும் இலக்கியக் கருத்தின்பம் எண்ணிலடங்குமா?

ஒரு ஷேக்ஸ்பியரைப் பெற்றதற்கே ஆங்கில மொழிவாணர்கள் பெருமிதத்துடன் கூறுவார்கள்: 'ஆங்கிலேயரான நாங்கள் இங்கிலாந்தை வேண்டுமானால் இழக்கச் சம்மதிப்போம்; ஆனால்ஷேக்ஸ்பியரை இழந்து விட எப்போதும் ஒப்புக்கொள்ள மாட்டோம்!'

அந்தச் செகப்பிரியனை, மில்டனை, ஷெல்லியை மிஞ்சும் கற்பனை வளமும் கருத்துத் திறமும் படைத்த நற்றமிழ்க் கவிஞர்கள் பல நூறு ஆண்டுகளுக்கு முன்பே இந்த மண்ணில் உலா வந்திருக்கிறார்கள் என்பதற்கு அழுத்தமான சான்றுகளே நம் தமிழ் இலக்கியச் செல்வங்கள்.

என் கல்லூரி நாட்களில், இலக்கியப் பாட வகுப்புகளில் டாக்டர் மு.வ., பேராசிரியர் அ.மு.ப., பேராசிரியர் அன்பு கணபதி போன்றோர் எடுத்துத் தொடுத்துச் சொன்ன தலை சிறந்த செய்யுள் வரிகள் இன்னமும் என் செவிகளில் ரீங்காரமிட்டுக்கொண்டே இருக்கின்றன.

**அப்படி என் நெஞ்சிலே கல்வெட்டாகிவிட்ட தமிழ்க் கவிவாணர்களின் தலையான அற்புத வரிகளில் சிலவற்றைத் தேர்ந்தெடுத்து, என் கண்ணோட்டத்தில் எந்தச் சூழலில், எப்படிப்பட்ட மனநிலையில் அந்த வரிகள் உருவாகியிருக்கலாம் என்று தனித்தனிக் காட்சி வடிவம் தர முயன்றிருக்கிறேன்.**

இந்தப் பத்தொன்பது கட்டுரைகளில், ஒவ்வோர் இலக்கியத்திலிருந்தும் ஒரு நிகழ்ச்சியை மட்டுமே

சொல்லோவியமாக்கி, ஒருபானைச்சோற்றுக்கு ஒரு சோறு என்று பதம் காணக்காட்டியிருக்கிறேன்.

இந்த நூலைப் படித்து முடித்துக் கீழே வைக்கும்போது, ‘அடேயப்பா! இத்தனைப் பெரிய இலக்கியச்சோலைக்கு உரிமையாளர்கள் நாமா?’ என்ற பெருமூச்சு எழும் என்பது திண்ணம்.

அதேபோல் இந்த நூலைச் சுவைப்போர், ‘இந்தக் குறிப்பிட்ட இலக்கிய நூலில், இந்த அடிகளிலேயே இத்தனைத் தித்திக்கும் சுவை தேங்கி நிற்கும்போது, மொத்த நூலிலும் எத்தனை அருஞ்சுவை கொட்டிக்கிடக்கும்?’ என்று பேரார்வத்துடன் அவற்றைத் தேடி முழுமையாக நுகர முன்வர வேண்டும் என்பதே இந்த இலக்கிய மாணவனின் அவா.

**இன்னும் தெளிவாகச் சொல்லவேண்டுமானால், ஒரு மாம்பழக் கடைக்காரன், தான் விற்பனை செய்யும் மாம்பழங்களின் தனிச்சுவையை எடுத்துக்காட்ட, அதில் ஒரு கனியின் சிறு துண்டை மட்டும் வெட்டித்தந்து, நம் நாவுக்குச் சுவை உணர்த்தி, மற்ற கனிகளையும் வாங்கச்செய்யும்**

**உத்தியைப்போல், இந்த நூல் பயன்படக்கூடாதா என்ற ஏக்கத்துடன்தான் இதை ஆக்கியுள்ளேன்.**

எடுத்துக்காட்டாக, '**படைமட**'த்திற்கு அஞ்சிய தமிழன், '**கொடைமட**'த்துடன் வாழ்ந்த வரலாற்றுக் கூறுகளை இறும்பூதுடன் விவரிக்க முனைந்திருக்கிறேன்.

வையத்தின் பல பகுதிகளிலே வாழ்ந்த மக்கள், நாகரிகத்தின் சுவடுகளைக் காணாமல், பச்சை இரத்தம் வழிய வழிய மனிதர்களையே மனிதர்கள் அழித்துத்தின்று கொண்டிருந்த காட்டுமிராண்டிக் காலத்தில், நம் தமிழ்ப்பாட்டன்மார்கள் எல்லாம் எப்படிப்பட்ட தூய பண்பாட்டு நெறியுடன் அற்புதமான அறவாழ்வு வாழ்ந்திருக்கிறார்கள் என்பதைக் கர்வத்துடன் சுட்டிக்காட்டியிருக்கிறேன்.

படையெடுத்து வந்த அடுத்த நாட்டு மன்னன் 'பாரீ'சின் பின்னால், கட்டிய கணவனுக்குத் துரோகம் இழைத்துவிட்டு, நடைபோட்டுச் சென்ற கதைத் தலைவி '**ஹெலன**'னைப் பற்றி 'இலியட்' போன்ற மாகாவியங்களை 'ஹோமர்கள்' பாடிக்கொண்டிருந்த அந்த நேரத்தில், கொண்ட கணவன் குறைவாழ்வு

தந்தாலும்,அவன் அடியொற்றி நடந்து, அவன் கொலைத்தண்டனைக்கு நீதி கேட்டு வாதாடி வெற்றி கண்ட தண்டமிழ்க் குலமகள் கண்ணகியின் கற்புக் காவியத்தைப் பாடிய இளங்கோவடிகளின் எழுத்தாணியை வணங்கி வழிபட்டிருக்கிறேன்.

என்றோ தீட்டப்பட்ட ஒரு பழைய குடும்ப ஓவியத்தை, ஒரு தாத்தா தன் பேரனிடம் காட்டி, 'இதோ நம் மூதாதையர் செல்வ உடையில் எப்படிப்பட்ட கம்பீரத்துடன் நிமிர்ந்து நிற்கிறார்கள்!' என்று கூறி மகிழ்வதைப்போல், அந்த இலக்கிய வரிகளின் சீர்த்தியையும், கீர்த்தியையும் விளக்க முனைந்திருக்கிறேன்.

மொத்தத்தில் இந்த நூல், மிகப்பெரிய தமிழ் இலக்கியக் கருவூலத்தின் தோற்றத்தைக் காட்ட விழையும் ஒரு சிறிய பூதக்கண்ணாடியாக மிளிர்கிறது.

இந்த நூலை இராப்பகலாகப் பாடுபட்டு எழில் குலுங்க உருவாக்கியுள்ள இலக்கிய இணையர் அய்யா ஆர். இராசசேகரன் – கௌமாரீசுவரி ஆகியோருக்கு என் உள்ளார்ந்த நன்றியறிதலைத் தெரிவிக்கின்றேன்.

இத்தொகுதியில் உள்ள பிழைக்கறகளைத் தன் விழிச்சல்லடையால் சலித்தெடுத்து, மெய்ப்புத்திருத்தி உதவிய தமிழேந்தல் புலவரேறு தங்க.சங்கர பாண்டியனார்க்கு என் நெஞ்சார்ந்த நன்றி உரித்தாகும்.

நூலைச் சுவையுங்கள்; நுட்பமான உங்கள் நெஞ்ச உணர்வுகளை இந்த எளிய படைப்பாளனுக்கு எழுதி அனுப்புங்கள்.

குதிரைமேல் ஏறி நெடிய பயணம் செய்து திரும்பிய மாவீரன், கீழே இறங்கியதும் அந்தக் குதிரையின் தாடையில் தட்டும் ஒரு செல்லமான தட்டுக்காக அக்குதிரை ஏங்கி நிற்பதைப்போல், உங்கள் எழுத்துப் பூங்கொத்தை எதிர்நோக்கிக் காத்திருக்கிறேன்.

வாழிய நம் சீரிளந்தமிழ் இலக்கியச் செல்வங்கள்.

அன்புள்ள,

சென்னை – 4
15.8.2001




**வாழை** ஒருமுறைதான் பூ மலர்ந்து அழகான குலை தள்ளும்! வண்டமிழ் மாதர் வாழையை ஒத்த காதல் வாழ்க்கையை வாழ்ந்து காட்டினார்கள்.

வாழ்க்கைச் சோலையிலே வாலைப் பருவம் ஒரு முறைதான் வரும் என்று காளையர்கள், சேலுக்குப் பின்னால் ஓடும் சிச்சிலிப் பறவைகள் போல் காணும் கன்னியரை யெல்லாம் விரட்டிக் கொண்டு ஓடியதில்லை!

பிறப்பு ஒரு முறைதான் தோன்றும் !

இறப்பும் ஒரு முறைதான் தோன்றும்!

**'ஏன் இதுபோல் தூயகாதலும் ஒரு முறையே தோன்றக் கூடாது?' இது தமிழர் வகுத்துக் கொண்ட இலக்கணம்.**

அவன் அவளைக் கண்டான்;

அவள் அவனைக் கண்டாள்!

நான்கு விழிகளும் கூடி அவர்கள் எதிர்கால வாழ்க்கையை முடிவெடுத்து விட்டன.

'நான்', 'நீ' என்ற சொற்களை நாலடி ஆழக்குழி வெட்டிப் புதைத்து விட்டு, 'நாம்' என்ற இனிய சொல்லைப் பயிரிட்டார்கள் அவர்கள்.

செத்துச் சிதை ஏறினாலும் ஒத்த கைகள் நெகிழக் கூடாது என்ற முத்தான தத்துவத்தை அவர்கள் நெஞ்சில் ஏற்றிக் கொண்டார்கள்.

ஆனால்....?

சாயாத தென்னைகள் அல்லவா ஓயாத சூறையை மிகுதியும் தாங்கித் தீரவேண்டும்?

எதிர்ப்பு பிறந்தது.

'ஏற்க மாட்டோம் உங்கள் காதலை!' என்றார்கள் பெற்றவர்கள்.

'பெற்றீர்கள்; கற்க வைத்தீர்கள்; உற்ற துணையைத் தேடிக் கொள்ள உரிமை தாருங்கள்' என்று கெஞ்சின அந்த நெஞ்சங்கள்!

ஆனால் 'ஆகாது, ஆகாது' என்ற சொற்கள் வேகாமல் வெந்து கருகிய அந்த இள உள்ளங்களை வாட்டி வதைத்தன!

இறுதி முடிவுதான் என்ன?

பாலூட்டிப் பறக்குமளவுக்கு வளர்க்கப்பட்ட பறவைகளைக் காலுக்கு விலங்கிட்டு, தனித்தனிக் கூட்டிலே தான் உங்கள் வாழ்க்கை முடங்க வேண்டும் என்றால் வளர்ந்த இளம் பறவைகள் அடைபட்டுத்தான் கிடக்க வேண்டுமா?

பறந்தன அந்தக் காதற்சிட்டுகள்!

பரந்த உலகிலே எந்தக் கோடிக்கேனும் ஓடிப்போய் எங்கள் உரந்தோய்ந்த காதலுக்கு வெற்றிக் கோட்டை அமைப்போம் என்று வீறுடன் புறப்பட்டனர் அவர்கள்.

'உடன்போக்கு' என்ற துறையின் கீழ் அக்காதலருக்கு இடம் தந்து வாழ்த்தி அனுப்பிற்று தமிழ்ப்பண்பு.

நடந்தனர்; நாட்டைக் கடந்தனர்.

வண்ணமலர்க் கைகளால் வாழ்த்துக் கூறி 'வருக' என்றழைத்தது, நாட்டின் எல்லையிலே இருந்த அந்த வளங்கொழிக்கும் பூஞ்சோலை! வாய் திறந்து வரவேற்புப்பா படித்தளித்தன புன்னை மரத்து இணைக்குயில்கள்!

''இங்கே தங்கி இளைப்பாறிச் செல்வோமா?'' என்றான், செங்காந்தள் விரல்கள் ஓடி விளையாடும் திண்டோளைப் பெற்ற அந்தத் திறல் மறவன்.

''தங்கு தடையேது?'' என்று கூறாமல் தலையசைத் தாள் முத்துப்பல்லால் சங்குக்கு ஒளியைக் கடன் கொடுக்கும் அந்த மங்காத மண்ணிலா!.

போர்க்களத்தில் யானையோடு யானையும், புரவி யோடு புரவியும், தேரோடு தேரும், மலைவதுபோல்

நேரிய காதற்களத்திலே விரல்களோடு விரல்களும், விழிகளோடு விழிகளும் இதழ்களோடு இதழ்களும் மோதி மலைந்தன!

இதற்குள்–

சலசல வென்ற ஒலி கேட்டது; தழைகளை விலக்கிக் கொண்டு யாரோ ஒரு செவிலித்தாய் அங்கே வந்தாள்.

''யாரம்மா நீங்கள்? இங்கே எதற்காக வந்தீர்கள்? எங்களிடம் என்ன வேண்டும்?'' அவன் கேட்டான்.

''வளர்த்த பாசம் என்னை இவ்வளவு தொலைவு இழுத்து வந்துவிட்டது; இளங்கிள்ளைகளே! உங்களைப் போன்றே இணைக் காதலரான ஓர் ஆணும் ஒரு பெண்ணும் இவ்வழியாகச் சென்றதை உங்கள் விழிகளால் கண்டீர் களா?'' நெடுந்தூரம் நடந்த களைப்பால் பெருமூச்செறிந் தாள் அந்த அன்னை.

''யாரம்மா அவர்கள்? நீ ஏன் அவர்களைத் தேட வேண்டும்?'' அவன் வினாக்களைத் தொடுத்தான்.

''அவர்களா? இதோ இந்தக் கைகளால் பாலன்னம் உண்டவர்கள்; இதோ இந்தத் தோள்களில் தொத்தி விளையாடியவர்கள்!'' கைகளையும் தோளையும் தொட்டுக்காட்டித் துயர் தோய்ந்த குரலில் கூறினாள் அந்தச் செவிலித்தாய்.

''அப்படியா?'' அவன் இதழ்கள் ஏதோ பேச முயன்றன; ஆனால் அவன் விழிகள் சற்றுமுன் படமாக்கிய காட்சியொன்றினை அவன் நெஞ்சத்திரை பளிச்செனெ வெளிக்காட்டியது.

அவன் தன்னருகில் இருந்த காதலியிடம் பேசினான்: ''அன்பே! இந்த வழியே ஆளியைப் போன்ற ஆணழகன் ஒருவன் மட்டும் சென்ற காட்சியைக் கண்டேன் நான்; நீ இந்த அன்னை சொல்வது போல் யாரேனும் இளநங்கை ஒருத்தி சென்றதைக் கண்டாயா?''

குனிந்ததலை நிமிராத அந்தப் பனிமலரின் இதழ்கள் மெல்ல விரிந்தன: ''என்ன கேட்டீர்கள்? கன்னியா? ஆமாம். சற்று நேரத்திற்கு முன் தென்றல்

சதிராடும் இச் சோலையின் வழியே வானிலிருந்து இறங்கி வந்த மின்னலைப் போன்ற மங்கையொருத்தி மட்டும் சென்றாள்; நான் கண்டேன்!''

அவள் சொற்களை உள்வாங்கிக் கொண்டு அவன் பேசினான்: ''வாடிய விழியுடைய தாயே! நீங்கள் நாடித்தேடி வந்த இணைக்காதலர் இவ்வழியேதான் சென்றிருக்க வேண்டும். நான் சுடர் போன்ற காளையை மட்டும் கண்டது உண்மை; இந்த நங்கையோ மலர் போன்ற மங்கையொருத்தியும் சென்றதைக் கண்டாளாம். ஆகவே நீங்கள் தேடி அலையும் சிங்கக்காளையும் மங்கையர்க் கரசியும் இவ்வழியேதான் சென்றிருக்க வேண்டும்; தளராமல் தாங்கள் இன்னும் சற்றுத் தொலைவு சென்று பார்த்தால் அவர்களைக் கண்டுபிடிக்க இயலும்.''

செவிலித்தாய் அவர்கள் சுட்டிய திக்கு நோக்கி நடந்தாள்.

**காளையின் விழிகளோ நெஞ்சில் நிறைந்துவிட்ட கன்னியைத் தவிர, வேறொருத்தியை எதிரே சென்றும் காணவில்லை.**

**கன்னியின் கண்களோ தன் உயிரில் கலந்துவிட்ட காளையைத் தவிர, வேறொருவன் எதிரே சென்றும் மறந்தும்கூட ஏறிட்டுப் பார்க்கவில்லை!**

'ஒருத்திக்கு ஒருவன்; ஒருவனுக்கு ஒருத்தி' என்ற இத்தமிழ்க் காதலரின் ஈடு எடுப்பில்லாத ஒப்பரிய பண்பைக் கண்டு உலகம் இன்னமும் வியந்து கொண்டிருக்கிறது!

**'நண்ணிநீர் சென்மின் நமரவர் ஆபவேல்**

**எண்ணிய எண்ணம் எளிதரோ– எண்ணிய**

**வெஞ்சுட ரன்னானை யான்கண்டேன்; கண்டாளாம்**

**தண்சுட ரன்னாளைத் தான்'.**

**– திணைமாலை நூற்றைம்பது.**






''யாரங்கே? எழிலனா? வா, நண்பா வா! 'வஞ்சி'யிலேயிருந்து எப்போது வந்தாய்?''

''சென்ற கிழமைதான் வந்தேன்; திறல்வேந்தன் உறந்தைச் சோழனின் ஆட்சியிலே முறைபிறழாத முன்னேற்றம் தென்படுகிறதா?''

''ஏன் தோழா, உனக்கு இந்த ஐயம்? புலிக்கொடி ஏறிப்பறக்கின்ற நாட்டிலே பொலிவுக்குக் குறைவேது? காவிரித்தாய் பூ விரித்து ஓடிவந்து கழனியெல்லாம் செந்நெல்லும் கரும்பும் செழித்தோங்கச் செய்கிறாள்; புகழ்விரித்த எங்கள் ஏந்தல் சோழமன்னனோ, இகல் மிதித்த அடலேறாய்த் திகழ்கிறான்; பாவிரித்தப் புலவர்களோ பைந்தமிழ்ச் சொல்லெடுத்து, நாவிரித்துப் பாடி நாடெல்லாம் இலக்கிய மணத்தைப் பரப்புகிறார்கள். பொன்விரித்தப் 'பூம்புகா'ரிலே எப்பொழுதும் பொருள்

விரிந்து கிடப்பதனால், என்றென்றும் வாணிகமோ சீரோடும் சிறப்போடும் நடைபெறுகிறது; பின்னும் எங்களுக்கென்ன குறையிருக்க முடியும்?''

''இல்லை! சோறு மணக்கும் சோணாட்டிலும் கடற் பகைஞர் சூழ்ந்து, புகார்த்துறை போகும் கப்பல்களை யெல்லாம் சூறையிடுகிறார்கள் என்று யாரோ சொன்னார்கள்!''

''திருத்திக்கொள், நண்பனே! கருத்திலே கள்ள உணர்வை ஒளித்த ஒருவனேனும் அரிமாவான எங்கள் அரசனின் சினமெனும் கனலுக்கு முன் கால்நொடியும் வாழ்ந்ததுண்டா? என்பதை முதலில் உன் நெஞ்சகத்தில் இறுத்திக் கொள்! நேரில் எதிர்நின்று போரிட்டவரின் நெஞ்சொடியச் செய்து, நீல விரிகடலைச் செங்குழம்பாக்கி விட்டு, நில்லாமல் புறமுதுகிட்டு ஓடிய கடல் எதிரிகளை ஓட ஓட விரட்டிவிட்டு, ஓங்குபுகழோடு திரும்பியவன் எங்கள் சோழ மன்னன். வாலவிழ்த்த பகைஞர் எங்களிடம் வாழ்ந்ததுமுண்டா? காலடியில் வந்து கதியென்று வீழ்ந்தவர் கெட்டதுமுண்டா? கடல்சூழந்த தீவகங்களில் எங்கள் மன்னனின் கால்பதியாத் தீவில்லை; நாரையும் கொக்கும் காணமுடியாத நடுத்திட்டுகளில்

எல்லாம் சீரோடும் சிறப்போடும் எங்கள் புலிக்கொடி பறந்து கொண்டிருக்கிறது; இப்போது என்ன சொல்கிறாய்?''

''சொன்னால் துடிப்பாயோ, என்று நா தயங்குகிறது; சோழ மண்ணில் ஏதோ ஓர் இனந்தெரியாத உட்குழப்பம் தலைதூக்குகிறது என்று யாரோ பேசிக்கொண்டார்கள்; நான் நினைப்பது...''

''தொடராதே, துளிக்கூட உண்மை கலவாப்பொய்ச் செய்தியை! சுழலும் இந்த வையகத்தில் எந்த நாடும் செய்யத்துணியாத ஆட்சி முறையைப் புகுத்தியிருக் கிறோம் நாங்கள்! சிற்றூருக்குச் சிற்றூர் , பேரூருக்குப் பேரூர் என்று அவற்றிற்கு முழு ஆட்சியுரிமையையும் சிறப்போடு அளித்து, அவற்றின் மேற்பார்வையை மட்டும் செருவேந்தர் ஆட்சிக்குழு ஏற்றிருக்கிறது. ஊராட்சி அமைப்பின் சீரைப்பற்றியும், ஒன்றியங்களின் உயர்வைப் பற்றியும், வாரியங்களின் நேரிய ஆட்சிப் பொறுப்பைப் பற்றியும் உனக்கு முன்பே செய்தி வந்திருக்க வேண்டுமே! மன்னர் ஆட்சியிலே மக்களாட்சியை இழைந்தோட விட்டிருக்கும் மாண்பினை வேறெந்த நாட்டிலே காணமுடியும்? எதிர்கால அறிஞர் உலகம் எங்களின்

புரட்சிக் கருத்தை ஏற்பதோடன்றி, எங்களுக்கு நன்றி கூறத்தான்போகிறது; ஆமாம். உட்குழப்பம் என்றா சொன்னாய்? ஏன், தோழா! உட்குழப்பம் ஏற்படப் போகிறது? அதிகார வெறி ஆளும் வேந்தனிடம் குவிந்து கிடக்கிறதா? அன்றிச் சின்னஞ்சிறு சிற்றூர் முதல் பேரூர் வரை ஆளும் பொறுப்பைப் பரவலாகப் பங்கிட்டுத்தர எங்கள் அரசன் மறந்துவிட்டானா? எதற்காக உட்குழப்பம் ஏற்பட வேண்டும்?''

''அது உண்மை. அண்மையில் சோணாட்டார் நடத்திய போரைப் பற்றித்தான்...''

''என்ன கூற வருகிறாய், எங்கள் போரைப் பற்றி? பொன் விளையும் வயலெல்லாம் நெற்சோற்றைக் குவிப்போம்; புழுதி கிளப்பும் போர்க்களத்தில் பகைவரின் நிணச்சேற்றைக் குவிப்போம். எங்கள் மகளிர் செங்காந்தள் விரலாலே செந்நெற் பயிரின் நாற்றை நடுவார்கள். நாங்களோ வாளால் சீவிய பகைவரின் தலைகளை, யானை உழுத வெங்களச் சேற்றிலே நடுவோம். வடபுலத்தான் வாதுக்கு வந்தது உண்மைதான். வாளெடுத்த எங்கள் தோள் கண்டு, தேள் கொட்டிய வானரமாய்த் துடித்தோடியதும் உண்மை.உணர்ந்து

கொள், நண்பா! 'உலா' பல கண்டவர்கள் எங்கள் ஓங்குசீர் வேந்தர்கள்! விலா எலும்பை முறித்து வெற்றிக் களிப் போடு திரும்பியிருக்கிறோமே தவிர, பலாக்கனியைக் கிழித்துச் சுளை எடுப்பதுபோல் எங்கள் வாளைப் பகைஞரின் குடற்குலையிலே குளிப்பாட்டியிருக் கிறோமே தவிர, விழி இமைத்துப் புறங்கண்டோம் என்பதற்கான வரலாறு எங்களிடம் ஏது?''

''எப்போதோ நடந்த போர்களைப் பற்றிக் கூறுகிறாய்; இந்த முறை மூண்ட போரில் உங்கள் வேந்தர் எதிரிகளால் தாக்கப்பட்டதாகச் சொன்னார்களே!''

''என்ன சொன்னார்கள்? சொன்னவர்கள் எங்கே இருக்கிறார்கள்? மன்னர் மன்னனின் வெற்றிப் பெருஞ் சிறப்பை உணர்வதற்கு அந்தச் சின்னஞ் சிறியவர்களை ஏன் நீ அணுக வேண்டும்? நறுந்தாது மாலை அணிந்த எம் கோமான் செறுபகை முடிக்கச் சினந்தெழுந்தால், விருந்து மலைமலையாகக் குவியுமே என்று விழி ஏங்கிக் காத்திருக்கும் ஆயிரமாயிரம் மலைப்பருந்துகளையும் கழுகுகளையுமல்லவா நீ போய்க் கேட்டிருக்க வேண்டும்? காட்டாற்று வெள்ளத்தின் விரைவு ஆற்றல் பெற்றதா,

அல்லது ஈட்டிகளைப் பாய்ச்சி எம் மன்னன் ஓடவிட்ட பகைவரின் குருதியாற்று வெள்ளத்தின் திறன் மிகுந்ததா என்பதை நீ கடலையல்லவா கேட்டுத் தெரிந்து கொண்டிருக்க வேண்டும்? காட்டுச் சிங்கத்தின் கவின் ஆற்றலைப் பற்றி வீட்டுப் பூனையிடமா வினவித் தெரிந்து கொள்வது?''

''இல்லை நண்பா! இனியும் நான் சுற்றி வளைத்துச் சொல்லப் போவதில்லை. என் இரு விழியால் கண்ட ஐயத்தை நான் ஏன் மறைக்க வேண்டும்? நேற்று உங்கள் ஆற்றல் மிகு அரசரின் பேரவைக்குச் சென்றிருந்தேன்; ஏறுநடையிட்டு வரவேண்டிய அவன், ஏனோ நொண்டிக் கொண்டே வந்தான்; என்னவென்று கவனித்தேன்; அவன் பாதங்களில் போர்க்காயம் தென்பட்டது; போயும் போயும் புவியாளும் மாவீரன், காலில் தானா போர்க் காயம் பெறவேண்டும்?''

''சேச்சே! நீ எவ்வளவு அறிவிழந்த ஆத்திரக்கார னப்பா? எங்கள் இறையைப் பற்றி எவ்வளவு தவறாக எண்ணிவிட்டாய்? அவன் காலடிகளில் நீ கண்ட காயம் அவ்வளவும் உண்மைதான். அந்தப்புண் எங்கே

ஏற்பட்டது தெரியுமா? ஏன் ஏற்பட்டது புரியுமா? போர்க்களத்திலே புறமுதுகு காட்டி ஓடியபோது, யாரோ எறிந்த ஈட்டியின் காயமல்ல அது! எந்தக் கொலு மண்டபத்தில் எங்கள் மன்னன் ஏறென அமர்ந்திருக் கிறானோ, அதே சிங்காதனத்தில் ஏற்பட்ட புண்தான் அது! மலைக்காதே தோழா! கன்னல் தமிழ்ச் சோழனின் ஆணைக்கு அடிபணிந்து பொன்னும் மணியும் கொண்டு வந்து குவித்து, திறை செலுத்திய மன்னர்கள் நாளும் அவன் கால்களில் வீழ்ந்து வணங்குகிறார்கள் அல்லவா? அவர்தம் பொன்முடிகள் காலில்பட்டு ஏற்படுத்திய புண்தான் அது! வேண்டிய விளக்கம் உனக்கு கிடைத்ததா, நண்பா?''

**'நின்றீமின் மன்னீர் நெருநல் திறைகொணர்ந்து**
**முன்தந்த மன்னர் முடிதாக்க –இன்றும்**
**திருந்தடி புண்ணாகிச் செவ்வி இலனே**
**பெருந்தண் உறந்தையார் கோ!'**

**–முத்தொள்ளாயிரம்.**






அது–

தென்னவரின் பொன்னான காலம் !

செங்குருதிச் சேற்றினிலே தமிழ்ப் பகைவர் சென்னியெனும் நாற்றை நட்டு, வெங்களத்தில் வெற்றிப் பயிரை அறுவடை செய்த சீரார் நேரம்!

அகிலெடுத்து அடுப்பு மூட்டி அனைவருடன் இருந்தருந்தி, முகிலெடுத்து ஆடையாக்கி நம் முன்னோர் வாழ்ந்த வேளை!

உண்ட மயக்கமன்றி ஒரு மயக்கம் யாமறியோம் என்று தண்டமிழ்க் கவிஞர் தமிழ்க்கவிதை நெய்த நேரம் !

குடையக் குடையக் குமரி ஆடுதல், ‘மடைதுள்ளும் கெண்டைக்கு நாங்கள் மட்டா?’ என அந்த இடைகாணா மங்கையர் பூப்பந்தாடுதல், படைமிதித்த மாவீரனையும்

கவிவேந்தர் கா. வேழவேந்தன்

பழவிழியால் மடக்கிக் கலவியாடுதல் ஆகிய இவற்றைத் தவிர, தமிழ்க்கன்னியர்க்கு வேறு தொழில் தெரியாதிருந்த காலம்!

ஏடும் எழுத்தாணியும் இலக்கியச் சிங்காதனம் ஏறி, தமிழொலித்த நல்லுலகை, கவிதைச் சட்டத்தால் எடுப்போடு ஆண்டு கொண்டிருந்த இனிமையான நேரம் !

கோடும் குன்றமும் நாடும் நகரமும் தமிழ்க் கொடியைப் பறக்க விட்ட ஈடுஎடுப்பற்ற எழிலார்ந்த காலம் !

**எங்கும் இன்பம், எதிலும் நிறைவு, எல்லாவற்றிலும் மகிழ்ச்சிமயக்கம் என்றிருந்த தங்கமான நேரம் !**

அதோ! அண்ணாந்து பார்த்தால் கண்ணெல்லாம் வலிக்கும் அழகு உமிழும் நெடுமாளிகை தெரிகிறதல்லவா? அதில் பதிக்கப்பட்ட கிளிச்சிறைப் பொன்னும், கொற்கை முத்தும், பொதிகை மணியும் சேர்ந்து நிலவுக்கு ஒளியைக் கடன் தந்து கொண்டிருந்தன!

வானை முட்டி மோதித் துளைத்து நிற்கும் அப்பெருமாளிகை, 'எனக்கு ஈடு உண்டா?' என்று வீறுடன், அறைகூவல் எழுப்பிக் கொண்டிருந்தது!

சொக்கத் தங்க ஒளியாலே சுடரெழுப்பும் அப்பளிங்கு மாளிகையின் முற்றத்தின் ஒரு பகுதியில், தோற்றுவிட்ட நிலவு, காற்றில் அடித்து வந்த ஓர் இலை தொங்குவது போல் தொத்தித் தொங்கிக் கிடந்தது.

முற்றத்தின் மறு பகுதியில் தன் சுற்றக் காதலியிடம், தன்னுடைய தலைவன் தலைவியிடத்தில் கற்ற பாடத்தைக் கறந்து வைத்துக் கொண்டிருந்தது ஒரு பச்சைப் பசுங்கிளி. தெள்ளு தமிழிலே எதுகையும் மோனையும் திரண்டு வெள்ளமென ஓடிவர, ஆண்கிள்ளை புதியதோர் அக நானூற்றை உருவாக்கிக் கொண்டிருந்தது. ஏனைய பறவைகளுக்குப் பேசும் இந்தப்பேறு ஏது?

தமிழால் கொஞ்சும் காதற்சிமிழான தன் ஆணழகனைப் பேடைக்கிளி, செக்கச் சிவந்த இதழால் தொடர்ந்து முத்தப் புனலில் குளிப்பாட்டி மகிழ்வித்தது.

சிறகோடு சிறகு ஒன்றுசேர, இறகுகள் உதிரும்வரை செம்மாந்த கலவியிலே ஈடுபட்டன காதல் உறவுக்கு மாகாவியம் தீட்டிய அக்கிள்ளைகள். கொதிப்பேறிய தம் உடலைக் குளிரச் செய்ய வேண்டாமா அவை? காதற் கிறக்கத்தோடு அந்த இணைக்கிளிகள் தம் தலைவி

ஆதரவோடு வைத்திருந்த அழகு வெள்ளிப்பாற் கிண்ணத்தைத் தேடின.

தும்பைப் பூவின் ஒளியைத் தூக்கி எறியும் தூய வெள்ளிக்கிண்ணமோ, செம்பவள வடிவமெடுத்துச் செதுக்கி வைத்த மூக்குடைய அக்கிளிகளுக்கு எதிரில் தென்பட்டது. பறந்தன அங்கே; பழச்சாறு கலந்த பளிங்குப் பாலிலே, கொஞ்சிப்பழமனைய தம் அலகை வைத்து ஒன்றை ஒன்று ஓரக்கண்ணால் பார்த்துக் கொண்டே உறிஞ்சத் தொடங்கின! ஐயோ! கிண்ணத்திலே இருந்த பால் மட்டும் ஏன் அக்கிளிகளின் வாய்க்குள் வரவில்லை? திகைத்தன அவை; ஏன் என்று உற்றுப்பார்த்தன!

அங்கே அடித்து வைத்த சந்தன அடைபோல் முற்றத்தின் எதிர்ப்புறத்திலே சிரித்துக் கொண்டிருந்தது வெள்ளி நிலவு! ‘அடப் பாவமே! நிலவின் சாயலையா பாலென்று நம்பி அருந்தினோம்?’ இப்படிக் கேட்டுக் கொண்ட அந்தக் கிளிகளின் முகங்கள் வெட்கத்தால் மேலும் சிவந்தன. தாம் செம்மையாக ஏமாந்த கதையை வெளிக் காட்ட முடியாமல் அவை ஒன்றை ஒன்று பரிதாபமாகப் பார்த்துக் கொண்டன!

அப்போது –

விற்சின்னமிட்ட பொற்காசுப்பையை, வெண்கலத் தட்டிலே அவிழ்த்ததுபோல், வெடிச்சிரிப்பை உதிர்த்துக் கொண்டே அங்கே வந்தனர் தலைவனும் தலைவியும்! வேதனையால் கூனிக்குறுகிப்போன அக்கிளிகளுக்கு இனி அங்கே என்ன வேலை? பறந்தன அவைகள்.

''தொட்டால் குளிர்வானேன்? தொடாவிட்டால் கொதிப்பானேன்?'' இப்படிப் புதிர் போட்டாள், பட்டுக்கு உவமையாகும் பாளைச் சிரிப்புக்காரி.

''மொட்டே! தேனடையே ! நெஞ்சூஞ்சல்தனில் ஆடும் சிட்டே! பழங்கள்ளே! செவ்வாழைப் பூவிரண்டைக் கட்டுக்குலையாத கவின் மார்பில் பெற்றவளே! கட்டித்தயிரே! கனலானாய், பொன்னானேன்! காற்றானாய், துரும்பானேன்!'' அவன் கனவுத் தேரேறிச் சென்று கவிதை பாடினான்.

அங்கே –

பொதியம் பிறந்து குதிபோட்டு வந்த பொல்லாத குறும்புத் தென்றல், அவளுடைய பெண்மையென்ற

நிதியம் காக்கும் பூந்துகிலையும் கையோடு இழுத்துச் சென்றது. விலகிப் போகின்ற துகிலைப் போகாமல் பிடிப்பதற்கு இப்போது அவள் கவலைப் படவே இல்லை!

வாயவிழந்த முல்லையோ, தன் வயிற்றில் பிறந்த நறுமணத்தை ஓயாமல் நடக்கின்ற தென்றலுடன் வழிகூட்டி அனுப்பியிருந்தது.

முற்றத்திலே ஒளிந்திருந்த வெற்றுடம்பு நிலவோ, பொற்றொடியின் உருவத்தையும் தன்னைப்போல் ஆக்கிக் காட்டவேண்டுமென்னும் பொறாமை எண்ணத்தால், பேரொளியை அவள்மேல் பாய்ச்சிக் கொண்டிருந்தது.

நெடுவாவியில் நீந்தும் சேற்கெண்டைகள், நீராடையை விலக்கிவிட்டு, நிருவாண கோலத்தில், காற்று வெளியில் வந்து துள்ளிக்குதித்த அற்புதக் காட்சியை அக்காதலர் கண்கொட்டாமல் பார்த்தனர்.

எங்கோ கிளைமறைவில் இருந்த மாங்குயில் தன் காதலிக்கு மட்டுமின்றி, உலகத்து உயிர்களுக்கெல்லாம் போதை ஏற்றுவதற்கு, சிங்காரக் குரலெடுத்துப் பாடிக் கொண்டிருந்தது.

தலைவன் சந்தனச் சேறெடுத்துக் காதலியின் உடலெல்லாம் குளிப்பாட்டினான். அவளோ இதழெனும் எழுத்தாணி கொண்டு, அவன் முகமென்னும் ஏட்டினிலே முத்தக் காவியங்களைப் பதிவு செய்து கொண்டிருந்தாள்.

காம்பு கிள்ளிய பனிமலரின் இதழ்கள் அக்காதலரின் கால்படும் இடமெல்லாம் தூவப்பட்டிருந்தன. தீம்புனல் கொழித்தோடும் இருகாட்டாறுகள் ஒரு பள்ளத் தாக்கில்கலந்தாற்போல், மாம்பிஞ்சு விழியாளும், மதயானைத் தோன்றலும் கலந்தார்கள்.

சற்றுமுன்வரை அந்த முற்றத்திலே இரு உருவங்கள் தென்பட்டன ; இப்போது ஏன் அங்கே ஓர் உருவம் மட்டும் காணப்படுகிறது? ஆம், நெஞ்சங்கள் ஒன்றியது போல் உடலங்களும் ஆயின.

'சே! பாழும் இரவு ஏன் இப்படிச் சிறகு கட்டிப் பறக்கிறது?' அவர்கள் அங்கலாய்த்தார்கள் இப்படி!

தணலும் தண்மையும் அவர்கள் உடலங்களில் மாறி மாறித் தலைகாட்டி மறைந்தன. கொடுக்கல் வாங்கல்

என்னும் முறைபிறழாத பேரம் அவர்களிடையே மிடுக்கோடு நடந்து கொண்டிருந்தது.

திடீரென்று, சலனமற்ற பொய்கையிலே மீன்கொத்தி பாய்ந்ததுபோல், யாரோ வருகின்ற ஒலி கேட்டது.

எங்கோ கற்பனை உலகத்திற்கு ஏகிய காதலர் இருவரும் இந்த வையத்திற்கு இறங்கி வந்தார்கள்.

கனிமொழியாள் தன் உருவை ஒரு முறை உள்ளங்கால் முதல் உச்சந்தலைவரை பார்த்துக் கொண்டாள்! "ஐயோ! இந்தக் கோலத்திலா நானிருக்கிறேன்?"இப்படி அலறினாள் அவள்.

ஒயிலான அவள் பாதங்கள் ஓடின. திருட்டுத் தென்றல் அவள் ஆடைகளை எங்கோ திரட்டிக்கொண்டு போய் விட்டது! இறுதியாக முற்றத்தின் ஒரு மூலையில் இருந்த அந்த வெண்ணிற ஆடையை ஓடிப்பிடித்தாள். ஆனால் அந்த ஆடை ஏன் அவள் கையோடு வரவில்லை? திகைத்தாள் அவள். திரும்ப அதனை உற்றுக் கவனித்தாள்!

ஆம். அவள் உடலில் தவழ்ந்த பூந்துகில் அல்ல அது. அவள் காதல் மயக்கம் கண்டு வெண்துகில் போன்ற 'பால் நிலவு'தான் அங்கே ஆணவத்தோடு சிரித்துக் கொண்டிருந்தது!

**'திங்கள் சொரிநிலவு சேர்வெள்ளி வள்ளத்துப்**
**பைங்கிள்ளை பாலென்று வாய்மடுக்கும்– அங்கயலே!**
**காந்தர் முயக்கொழிந்தார் கைவறிதே நீட்டுவரால்**
**ஏந்திழையார் பூந்துகிலா மென்று!'**

**–தண்டியலங்காரம்.**






'விருந்தற்ற சோறு மருந்து' என்ற வியப்புறு கொள்கையைக் கொண்டவர்கள் அருந்தமிழர்கள். காக்கைக்கும் பகிர்ந்துண்ணக் கற்றுக்கொடுத்தவன் தமிழன்.

**'இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி**
**வேளாண்மை செய்தற் பொருட்டு'**

என்றே தமிழ்ச்சட்டத்தை நிறைவேற்றி விட்டுச் சென்றார் வள்ளுவர்.

'பகிர்ந்து உண்ணும் பண்பை மனிதன் பெற்றால் அகிலத்தில் போர் ஏது? பூசல் ஏது?' என்றான் காரல் மார்க்ஸ். வள்ளுவர் மார்க்சின் முன்னோடி!

**நாங்கூழ்ப் புழுவின் நெளிவு;**

**நலங்கொழிக்கும் பூக்களின் மலர்ச்சி;**

**நடைபோடும் ஆற்றின் பாய்ச்சல்;**

இவற்றிலெல்லாம் வள்ளல் தன்மையையும் விருந்தோம்பலையும் கண்டு பிடித்துச் சொல்லோவியம் தீட்டியவர்கள் தமிழ்க்கவிஞர்கள்.

அது ஓர் அழகு துள்ளும் வாவி!

கொட்டி மலர்கள் மட்டின்றி மலர்ந்து சிரிக்கின்றன; சிட்டனைய சின்னஞ்சிறுவர்களின் விரல்களுக்கு ஏற்ற உவமை நாங்களே என்ற எக்காளம் போலும் அவற்றிற்கு.

பூத்த தாமரைக் குமரிகள் கதிரவனின் கடைக்கண் பார்வைக்கு இதழ் விரித்து ஏங்கிக் காத்துக்கிடந்தனர்!

சலனம் காணாத அந்த ஆழப் பொய்கையில், தாளம் போடும் அலைகளை உருவாக்கிக் கொண்டிருந்தது, நட்டுவனாரான சதிராடும் பூங்காற்று!

எங்கிருந்தோ ஒரு மலைக்குன்றம் நகர்ந்து வருவது போல் கரிய எருமையொன்று அங்கே அசைந்து வந்தது.

விரிந்த மலரைக்கண்ட வண்டு;

சிறந்த கனியைக்கண்ட மந்தி;

நிறைந்த நீரைக்கண்ட மேதி;

இவை செயல்மறந்து அமைதியாக இருந்ததுண்டா?

நெடுவாவியுள் புகுந்து நீந்தத் தொடங்கிற்று எருமை. தன்னை மறந்து, ஒரு தனி மயக்கத்தில் விழிகளை மூடித் துதைந்து துதைந்து நீந்தியது அது.

அப்போதுதான் அதன் பால் நிறைந்த மடிகளில் ஏதோ சில வந்து முட்டி மோதின! ஈன்ற தன் கன்றை எண்ணிப் பாசத்தால் நெக்குருகிற்று அந்தத்தாய் எருமை. அதன் மடியிலிருந்து அருவிபோன்ற தீம்பால் பெருக் கெடுத்து, அந்த நீலத் தடாகத்தைப் பாற்கடலாக்கிற்று.

எருமையின் மடியில் முட்டிய கன்றுக்குட்டிகளான நெடுவாளை மீன்கள், அந்த இனிய பாலை வேண்டிய மட்டும் அருந்தித் திளைத்தன!

அமுதம்போல் இனிக்கும் பாலை உண்ட வாளைகள் புத்துவகையும் புத்துணர்ச்சியும் பெற்றன. நீருக்குள் மட்டும் பேரரசு செலுத்திய அவை, நிலப்பகுதிக்கும் சென்று ஒருகை பார்க்கவேண்டும் என்று முடிவெடுத்தன.

பொய்கையின் கரையிலே பொலிவு தவழும் செடி களும் கொடிகளும் பூத்துக் காய்த்துக் குலுங்கின; அந்த எழிலார் காட்சியை எடுத்துக்காட்டும் முகக்கண்ணாடி யாக மிளிர்ந்தது அந்தக் குளம்!

வாலால் முரசறைந்து, வாவி நீரைக் கிழித்துக் கொண்டு வானில் எழும்பிய வாளைகள் கிளப்பிய பேரொலி எங்கும் எதிரொலித்தது.

எழும்பிக் குதித்த ஒரு நீள்வாளை, பொய்கையின் கரையிலே இருந்த நெடிய பலா மரத்தில் சென்று மோதிற்று; நிறைமாதச் சூல்மங்கையைப்போல், மிகப் பெரிய கனி களைப் பெற்ற அந்தப் பலாமரம் தன் பளுவைத் தாங்காமல் தாங்கிக்கொண்டிருந்தது.

வாளையின் தாக்குதலால் வளைந்த பலாவோ, பக்கத்திலிருந்த வாழை மரத்திலே சென்று இடித்து நின்றது. பாவம்! எந்த நேரத்தில் சாயுமோ என்று எண்ணும்படி, புது மணப்பெண்ணைப்போல், நீண்ட குலையைத் தாங்கிக் குனிந்து கொண்டிருந்தது அந்த வாழை!

ஆகவே எதிர்பாராத பலாவின் தாக்குதலைச் சந்தித்த வாழையோ, அடுத்துச் செழித்திருந்த தாழையின் மேல் மோதியது!

தண்டு கனத்திருக்கும் வாழையே திண்டாட்டம் போட்டதென்றால் தளிர்போன்ற பெண்டிர் தொட்டாலே துவளும் தாழை என்ன செய்யும்? சாய்ந்த வாழை போயும் போயும் பூத்துக் குலுங்கிய தாழைக் குருத்தின் தலையையா தன் சுமைதாங்கியாகக் கொள்ள வேண்டும்?

காவிரி அரிசியைச் சீராக அடுக்கியதுபோல் காணப்பட்ட தாழம்பூவின் குருத்து இதனால் தன் வாயைத் திறந்து கொண்டது.

சேர நாட்டு வேழத்தின் காலையொத்த வாழையின் திடீர் மோதலைத் தாழை தாங்க முடியுமா?

தாழையின் குருத்து, பூ மழையைக் கொட்டத் தொடங்கிற்று.

வன்மை வாய்ந்த தலைவன் மென்மை வாய்ந்த தலைவியின் மீது சாய்ந்த உடன், தலைவி முகமலர் முத்தை உதிர்ப்பதில்லையா? அந்தக் காட்சியை நினைவுப் படுத்திற்று தாழையின் இந்தச் செய்கை!

'வள்ளல் வாரியிறைத்த அமுதமா? செந்தமிழ்ப் பாவை மணிமேகலை அள்ளித் தந்த அன்னமா?' என்ற ஐயப்பாட்டைக் கிளப்பியது அந்தக்காட்சி!

சொரிந்த மலர்ச்சோறு கீழே விழுந்து வீணாகி விடாமல், ஏந்திக் கொள்ள முன்வந்தது வாழை. இதற்காகத் தன் தலையிலேயிருந்த குருத்திலையை விரித்துப்பிடித்துக் கொண்டது அது!

வாரிக்களத்தடிக்கும் வளமார் நெல்மணிகள் தூற்றப் படும்போது, பதர்களை மட்டுமே காற்று தன் பரிசாகக் கொண்டு செல்லும் ; ஆனால், இப்போது உதிரும் தாழை மலர்களிலிருந்து நுகர்வோர் மயங்கும் பெருமணத்தைக் கையோடு அழைத்துக்கொண்டு வழி நடந்தது பொதியம் பிறந்த தென்றல்!

தமிழரின் வீடுகளில் மட்டுமா அறுசுவை கலந்த விருந்து படைக்கப்படுகிறது?

**தமிழ்மண்ணில் கமழும் சோலைகளும்கூட விருந்தைப் படைத்து விரிந்த நெஞ்சைத் திறந்து காட்டின!**

இல்லாவிட்டால் தாழை உதிர்த்த சோற்றை, வாழை இலை தாங்கிக்கொண்டு வருவோர்க்கு விருந்து படைக்கும் ஈடு எடுப்பில்லாக் காட்சியை வேறு எந்த நாட்டு இலக்கியத்திலே காணமுடியும்?

'சூழமேதி இறங்குந் துறையிற்

சொரியும் பாலைப் பருகிய வாளை

கூழை வாசம் பலாவினிற் பாயக்

கொடும் பலாக்கனி வாழையிற் சாய

வாழை சாய்ந்தொரு தாழையிற் தாக்க

வருவிருந்துக் குபசரிப்பார்போல்

தாழை சோறிட வாழை குருத்திடும்

சந்திர சூடர் தென்னாரிய நாடே!'

— திருக்குற்றாலக் குறவஞ்சி.






''அம்மா... அம்மா!''

''யாரங்கே? கதவிடம் கைவரிசையைக் காட்டுவோர் யார்?''

''திறவுங்கள் அம்மா! திறக்காத நெஞ்சங்களை யெல்லாம் அமுத இசையால் திறக்க வைக்கும் பாணன் வந்திருக்கிறேன்.''

''ஓகோ! நீயா? உன்னிசைக்கு மயங்கிப் பொன்னை யெல்லாம் அள்ளிக்கொடுக்குமாறு கண்ணசைக்கும் அவர் இங்கேயில்லை. நீ சென்று வரலாம்.''

''தெரியும் அம்மா! உரியவர் உடைமையை விட்டுக் கானலை நம்பி ஓடியிருப்பது தெரியும். ஆதலால்தான்...!''

''ஆதலால்... என்ன உளறுகிறாய்?''

''கொதிக்காதீர்கள் தாயே! நதியின் அருமை கோடையில்தான் தெரியும்! மதியின் அருமை கும்மிருட்டில்தான் புரியும்!''

''பாணரே! பல்லவி வேண்டாம்; கூற வந்ததை நேரிடையாகக் கூறுங்கள்!''

''சொல்லச் சொன்னதைச் சொல்லத்தானே வந்திருக்கிறேன்.''

''ஓகோ! தூதா? என்ன சொன்னார் அவர்? பொன்னால் குளிப்பாட்டி, பூ வைரத்தால் அர்ச்சனை செய்து, 'கன்னலே! கனியே!' என்று அந்தப் பரத்தையிடம் கொஞ்சுகிற நேரத்தில் என் நினைவு கூட வந்ததா அவருக்கு? என்ன சொல்லி அனுப்பினார்?''

''திருந்திவிட்டாரம்மா அவர்! இனி பூவுக்குப் பூ தாவும் பொன்வண்டல்லவாம் அவர்; தாமரையையே சுற்றிவரப் போகும் தவளையாம்! பொருந்தாத பழிச்செயல் புரிந்து விட்டேன் என்று புழுங்கிப் புழுங்கி வருந்துகிறார்!''

''புனைந்துரையும், பொய்யுரையும் பொன்னுக்குப் பாடும் பாணர்க்கே உரியவை; நினைந்து நினைந்து

நெஞ்சொடியச் செய்தவருக்கும் அக்கலை கைவரப் பெற்று விட்டதா?''

''என்னம்மா கூற வருகிறீர்கள்?''

''பொன்னகைகளையும் இன்னும் எஞ்சிய காசையும் என்னிடமிருந்து கொண்டுவரச் சொல்லித் தானே உன்னை வழிக்கூட்டி அனுப்பியிருக்கிறார் அவர்! எடுத்துப் போ!''

''இல்லையம்மா, இல்லை! புடமிட்டத் தங்கமாகி விட்டார் உங்கள் துணைவர்; புனலில் இட்டப் பளிங்குச் சிலையாகிவிட்டார் உங்கள் கணவர். நெஞ்சத் தூய்மை யுடன்தான் தங்களை அணுகி இதைக்கண்டு வரச் சொன்னார்.''

''என்ன கண்டுவரச் சொன்னார்? இன்னமும் இந்த ஏழைமங்கை தன்னுயிரை வைத்திருக்கிறாளா என்று தானே கண்டுவரச் சொல்லி அனுப்பினார்.''

''கொண்ட பெருங்காதலால் கொதித்துப் பேசுகிறீர்கள். நண்டுகூட மாரி மிகுதியும் பெய்துவிட்டால், தன் வளை

மறந்து மற்றவற்றில் நுழைந்துவிடும்; அவ்வளையில் பாம்பு இருப்பதைக் கண்டால்தான், தன் தவற்றை உணரும்.''

''அப்படியானால்...''

''ஆம், அம்மா! பொன்விளக்கைத் துறந்து மின்மினியின் பின்னால் போனதை உம் துணைவர் உணர்ந்து விட்டார். கையிலே இருந்த நிலவை வீசியெறிந்து பொய்கையில் தெரிந்த விண்மீனின் நிழலுக்குக் கைவலிக்க நீந்திச் சென்றோமே என்று கண்கலங்கி நிற்கிறார் உம் கண்ணாளர்.''

''என் உயிருக்குயிரானவர் இதை உண்மையாகவா சொன்னார்? விழிக்கு இமையின் நினைவு வந்துவிட்டதா? என் வேந்தருக்கு என் நினைவு எப்போது வந்தது?''

''கண்ணிலே எதிர்பாராத ஒன்று மோதும் போதுதான் இமையின் இன்றியமையாமை தெரிகிறது. பெண்ணினத்தின் பேரரசியான தங்களின் நினைவு இப்போதுதான் அவருக்கு வந்திருக்கிறது.''

''அப்பப்பா! விலகிச் சென்ற என் இறைவன் நெஞ்ச ஆலயத்திற்குத் திரும்புகிறாரா? இதைக் காட்டிலும் வேறு எனக்குப் பேறுண்டா? ஆமாம். நேற்று அந்தப் பரத்தையின் வீட்டிலிருந்து விடியும்வரை ஏதோ ஓர் ஒலி கேட்டுக் கொண்டிருந்ததே. ஏன்?''

''என்னம்மா கூறுகிறீர்கள்?''

''ஆமாம், பாணரே! என் உள்ளத்தைக் கவர்ந்த வரையே கவர்ந்துவிட்ட அந்தப் பரத்தையின் வீட்டிலே யிருந்து ஏதோ ஓர் அவல ஒலி கேட்டதே!''

''அப்படியா?''

''காட்டிலழும் பேய்தான், அந்தக் காரிகையின் வீட்டுக்குள் நுழைந்து, கதறி அழுகிறது என்று என் அன்னை காரணம் கூறினாள்.''

''ஓ! அப்படியா?''

''அன்னை கூறியதை அடுத்திருந்தவர்கள் மறுத்தார்கள்.''

''அவர்கள் என்ன கூறினார்கள்?''

''பேய்அழுகை போயும் போயும் இப்படிக் கேட்குமா? இது உறுதியாகச் சதிபுரியும் நரியின்

ஓலமாகத்தான் இருக்கவேண்டும்; செவியைக் கிழிக்கும் அவல ஒலியல்லவா இது? என்றார்கள்.''

''உம். பின்னர்....''

''உடனே என் உருவின் நிழலான என் தோழி, அவர்களின் உரையை மறுத்தாள்.''

''அவள் என்ன சொன்னாள்?''

''நரி நாட்டுக்கு வருவதற்கு உரிய ஏது இல்லை! இந்த அவல ஒலியை எழுப்புவது ஓயாத வலிகண்ட ஏதோ ஒரு நாயாகத்தான் இருக்கவேண்டும். அதுதான் இரவு முழுதும் இப்படி ஒப்பாரி வைக்கிறது, என்றாள்.''

''அப்படியா சொன்னாள்?''

''ஆம் பாணரே! இவர்களின் சொற்போருக்குப் பிறகு நான் மெல்லச் சிரித்துக் கொண்டே கூறினேன்.''

''என்ன கூறினீர்கள்?''

**''இது பேயோ நாயோ எழுப்பும் ஒலியன்று. இங்கே வரும் பாணர்தான் பரத்தையின் வீட்டில் பாடிக் கொண்டிருக்கிறார் என்றேன்; என்ன உண்மைதானே?''**

''ஆமாம் அம்மா! உன் போட்டிக்குரியவளின் பூசலை அமைதிப்படுத்த, நான்தான் இரவெல்லாம் பாடிக் கொண்டிருந்தேன்!''

அந்தப் பாணன் இதைக்கூறித் தலையைக் கவிழ்த்துக் கொண்டான். சிரிப்பை அள்ளி வீசிய அந்தத் தேயாத நிலவு, முத்துமாலை யொன்றை அவன் கைகளில் தூக்கியெறிந்து விட்டுக் கணவனை வரவேற்கத் தாவி ஓடினாள். பாணன் சிறிது தொலைவு நடந்த பிறகே பாடிக்கொண்டு போனான்.

நகைச்சுவை உணர்வை நளினத்துடன் வழங்கும் அந்தப்பாடல் இதோ:-

**'ஈட்டுபுகழ் நந்தி பாண!நீ எங்கையர்தம்**
**வீட்டிருந்து பாட விடிவளவும்-காட்டிலழும்**
**பேயென்றாள் அன்னை பிறர்நரியென்றார் தோழி**
**நாயென்றாள் நீயென்றேன் நான்.'**

**-நந்திக் கலம்பகம்.**






பறை அறையப்பட்டு விட்டது!

படை இரண்டும் மடையுடைந்த காட்டாறாய்ப் பாய்ந்து மலைந்தன.

நேற்றுவரை, அருவியிலே புனலாடியவர்கள், சீற்றம் கொண்டு எழுந்து செறுபகைவரின் குருதியிலே குமரி யாடினார்கள்.

நீல மாக்கடலின் நிறத்தை மாற்ற எண்ணி, அலை மண்டிய செந்நீர் வெள்ளத்தை அப்பக்கம் திருப்பிவிட்டது அந்த வீறு கொண்டெழுந்த படை!

எதிரிகளின் தலைகளைப் பனங்காய் சீவுவதைப் போல் சீவி உதிரச்செய்தான் அந்த **மாவீரன்!**

நாவல் மரத்தின் கிளை அசைந்தால் கருமை நிற வண்ணக்கனிகள் ஆலங்கட்டி மழைபோல் உதிரு மல்லவா?

அவன் வாள் அசைந்தது; சடசடவெனச் சரிந்து விழுந்தன தலைகள்!

அவனுடைய தாயகத்துத் தன்மானத்தைப் பழித் தோரின் மார்பிலே அவன் சுழல்வாள் நீந்தித் திளைத்தது!

கண்ணோக்கிய திக்கெல்லாம் நிணச்சேறு தேங்கிக் காணப்பட்டது!

காட்டாற்றிலே மிதந்துவரும் நுரைத்திட்டுகள் போல், எதிரிகளின் மண்டை ஓடுகள் பயணம் செய்தன. கால்வேறு தலைவேறாகப் பிய்ந்து சென்ற உடலங்கள் காற்றிலே உருமாறிப் பறக்கும் முகிற் கூட்டங்களை நினைவூட்டின.

குருதியாற்றிலே அடித்துச்செல்லும் எதிரிகளின் எலும்புத் துண்டங்கள், எதிர் நீச்சலிட முடியாமல் சுழலோடு செல்லும் பலவகை மடுமீன்களை நெஞ்சிற் கொண்டு வந்தன.

எங்கெங்கும் பேரொலி,

எங்கெங்கும் பிணக்காடு,

எங்கெங்கும் ஊன் நாற்றம்!

அந்த மறவன் வெற்றிக் களிப்புடன் புன்னகை சிந்தச் சுற்றிச் சுழன்று வந்தான்.

'எங்கே என் அன்னைத் திருநாட்டின் ஏற்றத்தைப் பழித்த சங்கை கெட்டோர்?' இப்படி வினா எழுப்பின அவன் செவ்விதழ்கள்!

'எலும்பில்லா நாவால் எம்மைப் பழித்துப் புலம்பிய வர்கள் இனி இருக்குமிடம் எங்கே?' என்று சிலம்பொலிப் பதுபோல் சிரித்தான் அவன்.

ஆனால் போரோசை இன்னும் ஓயவில்லை.

மின்னல் ஒன்றையொன்று வெட்டிக்கொள்ளும் போது இடியொலி முழங்குமல்லவா?

வேல்கள் ஒன்றோடு ஒன்று மோதிக்கொண்டன. விண்ணதிரும் அந்தப்பேரொலி, விருந்துண்ணச் சுற்றி வரும் கூளிகளுக்கு இசையமுதாக இனித்தது.

ஆம். இன்னொரு புறத்திலே எதிரிப்படையின் ஒரு பகுதி தன் படையுடன் மோதுவதை அவன் விழிகள் கண்டுவிட்டன.

'வாளுக்கு விருந்து கிடைத்து விட்டதே!' என்று பூரித்த அவன் தோள்கள் சிலிர்த்துச் சூளுரைத்தன!

கீரைத் தண்டு வளர்ந்த தோட்டத்திலே, சேரநாட்டு வேழம் ஒன்று புகுந்ததுபோல் ஆயிற்று.

நீரைக் கிழத்தோடும் நெடிய திமிங்கலம்போல், பகைப் படையைக் கிழித்துக்கொண்டு சென்ற அவன் காலடிகளில் உடற் பிண்டங்கள் குவிந்தன. கீழே நின்று போரிட்டாலும், மேலே இருந்து காணும் கழுகுகளுக்கு அவன் வாரியளிக்கும் பாரியானான்.

நேரம் பறந்து கொண்டிருந்தது.

எங்கிருந்தோ வந்த எதிரிகளின் புதுப்படைகள் அவனைச் சூழ்ந்து கொண்டன. கானாற்று மணலில் திரிந்த கொம்புமானால், கண்மூடித் திறப்பதற்குள் வந்து சூழ்ந்து விட்ட காட்டாற்று வெள்ளத்தைத் தாங்கிக்கொள்ளவும் முடியுமா?

அயராத அவன் தோள்கள் சிறிது அயர்ந்தன!

சோர்வு அவனைச் சற்றுத் தோயச் செய்தது!

என்ன செய்வான் அவன்?

நீண்ட நேரம் சுற்றிச்சுழன்றதால், தள்ளாடிற்று அவன் உடல்; ஆனால் அவன் எஃகு நெஞ்சமோ வாளைச் சுழற்றிக் கொண்டே இருந்தது.

அடடா! மேன்மேலும் அவனுக்கு அறைகூவலா?

எட்ட இருந்து எழுந்து வந்த ஏதோ ஓர் இரைச்சல் கிட்டே நெருங்கி வந்தது. எதிரிப்படையைச் சேர்ந்த போர்த் தளபதி ஒருவன் ஏழு குதிரைகள் பூட்டிய நெடுந்தேரில் காற்றாகப் பறந்து வந்தான். அவன் தோற்றத்தில் வீறு தென்பட்டது. எதிரே எவர் எவர் இருக்கிறார்கள் என்று அவன் இம்மியும் எண்ணவில்லை.

பாய்ந்து வந்த தேர், ஓய்ந்து தள்ளாடிக் கொண்டிருந்த நம்மாவீரன் மேல் எதிர்பாராமல் ஏறி ஓடிற்று!

செம்மாந்து நின்ற அந்தச் செழித்த வாழை மண்ணிலே சாய்ந்தது!

ஆம். தேர்ச்சக்கரம் அந்தப் போர்வீரனின் தலையின் மேல் ஏறிவிட்டது.

அப்பப்பா! அந்த நெருக்கடியான இறுதி நேரத்திலும் 'என் தாயகம் வெல்க!' என்று சிந்துபாட அசைந்தது அவன் வாய்.

ஆனால் அவன் நா அசையவில்லை.

விழிகளிலிருந்து மட்டும் குருதி வெளியே பாய்ந்தது.

செவிகளின்மேல் தேர்ச்சக்கரம் ஆழத்தாக்கி விட்டதால் கேள்விச் செல்வமும் அவனை விட்டுப் பிரிந்து விட்டது.

இதற்குள் அன்றையப் போர் முடிவுற்றதாகச் சங்கொலி எழுப்பப்பட்டது.

எஞ்சிய படைகள் இளைப்பாற பாடிவீடு நோக்கித் திரும்பின.

எந்தத் தலைவனின் சுட்டு விரலுக்கு அடிபணிந்து, அந்த மானமறவன் போர்க்களம் புகுந்தானோ, அந்த மன்னன் சாய்ந்து கிடந்த தன் படையின் கணக்கறியப் போர்க்களம் நுழைந்தான்.

தச்சன் பட்டறையில் மரங்கள் அறுபட்டுக்கிடப்பது போல், வெங்களத்தில் வீரர்களின் மெய்த்துண்டங்கள் அங்கொன்றும் இங்கொன்றும் சிதறிக் கிடந்தவற்றைக் கண்டான்.

சற்றுத் தொலைவினில் அந்த மாவீரனின் உடல் மெல்ல அசைந்து துடித்துக்கொண்டிருந்தது.

அருகே நெருங்கினான் அரசன்.

சாவின் மடிக்குத் தாவிக்கொண்டிருக்கும், அந்தத் தன்மானக் காளையின் சிதைந்த உடலைக் கண்டு நெக்குருகிப்போனான் மன்னன்.

தலைவனின் ஆணைக்குத் தாள் பணிந்து, களச் சாவைப் பரிசாக ஏற்ற அந்த வீர இளைஞனுக்குத் தன் நன்றியுணர்வைத் தெரிவித்துக் கொள்ளக் கருதினான் அரசன்.

இறுதித் துடிப்பால் அசையும் அந்த ஈடற்ற மறவனின் உடலை மெல்லத்தூக்கித் தன்மார்பில் அணைத்துக் கொண்டான் வேந்தன்.

'வெற்றித்திருமகனே! உன் மாவீரம் வீண் போகுமா? உன் ஒப்பில்லாத் தொண்டுக்கு எந்த வகையில் நான் நன்றி கூறப்போகிறேன்?' இப்படிக் கூறாமல் கூறிக்கொண்டே மன்னன் விழிகளிலிருந்து உதிர்ந்தன கண்ணீர்த் துளிகள்!

விழிப்புலனும், நாப்புலனும் முழுக்க முழுக்க மழுங்கிப் போய், இறப்பின் முகட்டுக்கே பறந்து கொண்டிருந்த அந்த மாவீரனின் உடல்மேல் சிந்திய அரசனின் விழிநீர்த் துளிகள், அம்மறவனை இன்பத் தேனாற்றில் குளிப்பாட்டின!

'இரந்தேனும் பெறவேண்டிய தலைவனின் கண்ணீரைப் பெறும் அரியபேற்றை இன்று நான் பெற்றுவிட்டேன்! இனி இந்த உலகில் வேறு எந்த இன்பம் வேண்டியுள்ளது?' இந்த அமைதிப் பெருக்கால் அவன் முகத்திலே மகிழ்ச்சிக் கோடுகள் மின்னலிட்டன!

அடுத்த நொடியே அவன் உடலின் இறுதித் துடிப்பும் அடங்கி ஒடுங்கிவிட்டது.

வீரச் சாவுக்காக இரந்து நின்ற அந்தத் தீரச் சிங்கத்தைத் தமிழ் மண்ணிலன்றி வேறு எங்கே காணமுடியும்?

**'புரந்தார்கண் நீர்மல்கச் சாகிற்பின் சாக்காடு**
**இரந்துகோள் தக்க துடைத்து'.**

**– திருக்குறள்.**






நீதி பிறழ்ந்தது!

நெறி குலைந்தது!

செங்கோல் வளைந்தது!

தீராத பழி சேர்ந்துவிட்டது!

மன்னன் நெடுஞ்செழியன், புயலால் தென்னை சாய்வதுபோல் மண்ணில் சாய்ந்தான்!

''கோவலன் கள்வனல்லன்; காவலனே கள்வனானேன்.

ஆழ்ந்து செயலாற்றாத எனக்கேன் ஆட்சிச் சிங்காதனம்?

அணுவேனும் குற்றமற்றவனின் தலையைத் துணித்து விட்ட இந்த மாபாவிக்கேன் ஒரு செங்கோல்?

ஆதிமுதல் வழிவழியாகச் செழித்த தமிழரின் அறநீதியை ஆழக் குழி வெட்டிப் புதைத்த என் உடலிலா இன்னமும் உயிர் ஒடுங்கிக் கிடக்கிறது?

நீதிக்கு நீதி வழங்க வேண்டாமா?

தலைக்குத் தலை உருள வேண்டாமா?

உயிருக்கு உயிரை வழங்க வேண்டாமா?''

இப்படிக் கதறிக்கொண்டே, விண்வரை தன் புகழ்க் கொடியை நாட்டி, மண்ணிலே வீழ்ந்தான் பாண்டியன் நெடுஞ்செழியன்.

அரசவை அதிர்ச்சியால் குமுறிக் கொந்தளித்தது!

அகிலத்தின் எந்தக் கோடியில் இத்தகைய காட்சி அரங்கேறி இருக்கிறது?

குடிமகன் ஒருவனின் எளிய உயிருக்கு, முடிமகன் ஒருவன் தன் உயிரையே பணயமாக எடுத்து வைத்து நீதியை மீட்ட வரலாறு எங்கே நிகழ்ந்திருக்கின்றது?

இப்படி வெடிக்கும் நெஞ்சத்துடன் வியப்பின் முகட்டில் சென்று நின்றார்கள் கூடியிருந்தோர் அனைவரும்.

ஆனால் அடுத்த நொடியே அந்த நிகழ்ச்சியும் நடை பெற வேண்டுமா?

மன்னன் மாய்ந்தான்; அன்னையாம் பாண்டிய குலக்கோப்பெருந்தேவி அடுத்து அலறி எழுந்தாள்.

நடுங்காத அவள் உடல் நடுங்கிற்று.

குலையாத அவள் மேனி குலைந்தது.

''என் இறைவன் மறைந்து விட்டாரா?

என் உள்ளக் கோயிலின் எழில் விளக்கு ஓய்ந்து அணைந்துவிட்டதா?

அப்படியானால் என் உயிர் இந்த உடலில் ஏன் ஒட்டிக் கொண்டிருக்க வேண்டும்?

கணவன் உருவென்றால் கட்டிய மனைவி அவன் நிழல் அல்லவா?

துணைவன் பொய்கை என்றால் தொத்தும் கிளியான அவன் மனைவி, அதில் மலர்ந்து மணக்கின்ற தாமரை யல்லவா?

உருவில்லாவிட்டால் நிழல் ஏது?

ஒய்யாரப் பொய்கை இல்லாவிட்டால் தாமரை ஏது?

உற்ற கணவர் போனபின் சுற்றம் ஏது?

தாய் மாயலாம் ; தாய் போய்விட்டால் உலகிலுள்ள ஒரு மூதாட்டியைச் சுட்டிக் காட்டி, 'இவளைத் தாயாக ஏற்றுக்கொள்' என்று மாற்றார் வேறு ஒருத்தியைத் தாயாகக் காட்ட முடியும். காட்டப்படுகின்ற அவளைத் தாயென்று நானும் அழைக்க முடியும்!

தந்தை மறையலாம்; சொந்தமும் பந்தமும் நிறைந்த எந்தை போய்விட்டால், ஊரில் வயதான ஒரு பெரியவரைச் சுட்டிக்காட்டி, 'இவரையும் தந்தையாகவே நினைத்துக் கொள்,' என்று வையகத்தால் கூறமுடியும்; நானும் அவரைத் தந்தையாக ஏற்றுக்கொள்ள முடியும்.

மகன் மடியலாம். 'மகனே, மகனே!' என்று உற்ற மகன் மாண்டதை எண்ணி நான் உருகும்போது, உலகம் வேறொரு குழந்தையைக் கொண்டு வந்து, 'இதோ இவனும் மகன்தானே ஏற்றுக் கொள்' என்று கூறலாம்; நானும் அவனை மகனாக ஏற்றுக் கொள்ள முடியும்.

அண்ணன் அழியலாம்; கண்ணான அண்ணன் மண்ணாகிப் போனானே என்று கதறும்போது இந்த மாவையம் மூத்தவன் ஒருவனைச் சுட்டிக் காட்டி, 'இவனை ஏன் அண்ணனாக ஏற்றுக் கொள்ளக்கூடாது?' என்று கேட்கலாம். நானும் அவனை அண்ணனாக ஏற்றுக் கொள்வதில் அட்டியில்லை.

ஆனால்....

உயிருக்குள் உயிரான உற்ற துணைவனே போய்விட்ட பிறகு உலகில் என்ன எஞ்சியிருக்கிறது?

ஊரிலிருக்கிற ஒருவனைச் சுட்டிக் காட்டி, 'இவனும் உன் கணவனே!' என்று எந்த இழிபண்பாளனும் கூற முடியுமா? கணவனையிழந்த மனைவியர்க்கு, மண் மீது கணவனாக ஒப்பிட்டு அவனுக்கு ஈடாகக் காட்டுவதற்கு வேறு ஒருவா உண்டா?

ஓர் ஆறு பாழாகிவிட்டால், உலகத்தில் ஓடுகின்ற வேறோர் ஆற்றைக் காட்ட முடியும்.

ஒரு விண்மீன் உதிர்ந்து விட்டால் மற்றொரு விண்மீனைக் காட்டி ஆறுதல் கூற முடியும்.

ஒரு மலர் கருகி விட்டால் இதழ் அவிழும் மற்றொரு மலரைச் சுட்டிக் காட்ட முடியும்.

ஆனால் –

ஒளி உமிழும் கதிரவனே அழிந்து விட்டால், மண் மகளுக்கு வேறொரு கதிரவனைக் கொண்டு வந்து காட்ட முடியுமா?

நீதிக்கு விலையாகத்தன் நேரிய உயிரையே அளித்து விட்டார் என் நெஞ்சத் தலைவர்.

பாதி அழிந்துபோன பின் மீதி மட்டும் வையத்தில் நிலைக்க முடியுமா?

போய் வருகிறேன் நான்; பொற்றமிழ் மாதர் போற்றும் புகழ்க் கற்பின் வரலாறு நீடூழி வாழ்க!''

இப்படிக் கூறி வேரோடு பிடுங்கிய பூங்கொடி சாய்வதுபோல், வேந்தன் நெடுஞ்செழியன் உடல்மீது சாய்ந்தாள் அந்தச் சீரும் சிறப்பும் பெற்ற பேரரசி!

இணைந்தே வாழ்ந்த அவர்கள் இணைந்தே மறைந்தார்கள்.

பிணைந்த கைகளுடன் வாழ்வைத் தொடங்கிய அவர்கள், இணைந்த கைகளுடன் வாழ்வை முடித்துக் கொண்டார்கள்.

உலகம் இமைகளை உயர்த்தி நோக்குகிறது!

கட்டிய கணவன் '**மெனலஸ்**' என்பானை எட்டியாக எண்ணியதுடன், தொட்டுத் தூக்கிச் சென்ற '**பாரீ**' சை விரும்பிய '**ஹெலெ**'னைப் பற்றியும் '**இலியட்**' என்ற காவியம் புகழ் பாடுகிறது!

பட்டது உற்ற துணைவரின் உயிர் என்றதும், பட்டத் தரசியாம் கோப்பெருந்தேவி, சுட்ட சட்டியைக் கைவிடுவதுபோல், உலகை விட்டுச் சிட்டாகப் பறந்தாள் என்ற செய்தி கண்டு, உலக இலக்கிய அறிஞர்கள் தம் மூக்கின் மேல் விரல் வைக்கிறார்கள்!

'யார் இந்த எழிலார்ந்த கற்பிலக்கியத்தின் சொந்தக் காரர்கள்?' என்று வியப்போடு கேட்கிறார்கள்.

'இதோ இருக்கிறோம்' என்று இறுமாப்புடன் மார் தட்டுகிறோம் நாம்.

'கெடுகஎன் ஆயுள்என
மன்னவன் மயங்கிவீழ்ந் தனனே தென்னவன்
கோப்பெருந் தேவி குலைந்தனள் நடுங்கி,
கணவனை இழந்தோர்க்குக் காட்டுவ தில்என்று
இணையடி தொழுதுவீழ்ந் தனளே மடமொழி'

– சிலப்பதிகாரம்.



# வரிக் கொள்ளை



''எழில்வளை! ஈரிரண்டு நாட்களாக நீ ஏன் என்னிடம் சரிவர உரையாடுவதில்லை? நாடெல்லாம் தான்பெற்ற வெற்றியின் பீடு கண்டு மகிழ்ச்சியில் ஆழ்ந்து கிடக்கிறது; உனக்கு மட்டும் என்ன நேர்ந்து விட்டது? ஒருவேளை கடந்த தென்பாண்டிப்போரில், சோழவளநாட்டின் மானங்காக்கத் தன் உயிரைக் காணிக்கையாக்கிய உன் அண்ணனை எண்ணி வருந்து கின்றாயா? உண்மைதான். அவர் மட்டும் இருந்திருந்தால் சோணாட்டுக்குக் கிடைத்திருக்கும் இந்த மாபெரும் வெற்றிகண்டு எத்தனைப் பூரிப்படைந்திருப்பார்?''

''தேன் குழல்! என் கவலை அதுவல்ல; சிங்காரத் தாயகத்தின் சீர்காக்கத் தன் மூச்சினையே பணயமாக்கிய என் அண்ணன்தான் என் நெஞ்சத்திலேயே குடி

கொண்டிருக்கிறாரே, அவரைப்பற்றிப் புதிதாக நான் ஏன் கவலைப்படப் போகிறேன்?''

''பின் உனக்கு என்ன வந்தது? ஒரு வேளை கடற்கொள்ளையரைத் தோற்கடித்து வந்த பொன்னி நாட்டு வீரரில் உன் குடிக்கென்று இன்னும் ஓர் ஆண் மகன் இல்லாமற் போனானே என்று வருந்துகின்றாயா?''

''அதற்காகவும் அன்று. வேழமுடை வேந்தனாம் நம் சோழ மன்னன் தன் படையில் ஓரிரண்டு வீரர்கள் குறைந்து விடுவதால் மட்டும் வெற்றியை நழுவ விட்டு விடுவதில்லையே! உறக்கத்திலும் போர்க்கனவு காணும் பொன்னிவளநாட்டு வீரரும், ஒப்பில்லா வளவனும் இருக்கும்வரை தோல்வி என்ற சொல்லே காவிரி நாட்டின் எல்லைக்கப்பால் அல்லவா உலவ முடியும்?''

''நன்று, நன்று. எழில்வளை! பின் என்ன? நீயே சொல்லிவிடு. உன் தங்க முகத்தில் வழக்கமாக ஒளிரும் புன்னகையைக் காணோமே, ஏன்? ஒரு வேளை உன் அன்னையார் அங்காடியிலே வாங்கி வந்த 'பிறைச் சிந்தாக்கு' உன் கழுத்துக் கேற்ற அணியாக அமைய வில்லையா? ஆமாம். உன் தாய் உன்னையும் உடன்

அழைத்துச் செல்ல மறந்து விட்டார்கள் போலும்! இதற்கெல்லாம் நீ ஏன் வீண் கவலைப்படவேண்டும்?''

''போதுமடி! பிறைச்சிந்தாக்கில் ஒன்றும் பிழை இல்லை; அருமையாக அமைந்திருக்கிறது அந்த அணி; ஆனால் இந்த நாடு செல்லும் போக்கைக் கண்டால் தான்...''

''ஏன் உனக்கு இந்தப் புதுவித ஐயப்பாடு? நாடு செல்லும் பாதையிலே என்ன கேடுறும் முறைக்கேட்டை கண்டுபிடித்து விட்டாய்? இத்தனை நாள் மொத்தமாகப் பழகிவரும் என்னிடம் கூடச் சொல்லாமல் அப்படி எதைப் போட்டுக் குழப்பிக் கொள்கிறாய்?''

''நாடு என்றால் இந்த நாட்டிலே வாழும் ஒவ்வொருவரைப்பற்றியும்தான் குறிப்பிடுகிறேன்!''

''கொஞ்ச நேரத்திற்கு முன்பு தானே சொன்னாய்! மன்னன் மறவர்குல திலகம்; மங்காப்புகழ் பெற்ற சோழ வளநாட்டு மக்கள் மானங்காப்பதில் தலைசிறந்தவர்கள் என்று! இதற்குள் ஏனிந்த மாற்றம்?''

''உண்மைதான்! உங்கள் சோழன் திண்டோள் காட்டி வெற்றிதேடும் திறல்வேந்தன் என்று மட்டும் கூறி நிறுத்தியது மிகமிகத் தவறுதான்...''

''பின்....''

''அந்தக் கெழுதகை வேந்தன் இப்போது ஆட்சி நெறியிலிருந்து தவறி நடக்கும் கொடுங்கோலனாகவும் மாறிவருகிறான். எங்கெங்கும் வெற்றிக் கொடி பொறித்த சோழமரபுக்கு இழுக்கைத் தேடுவோனாக இருந்து வருகிறான், ஆளும் சோழ மன்னன்!''

''மூச்சு விட்டுக்கொள், மொய் குழலே! அப்படி என்னடி நாட்டுக்கும் ஏனைய நன்னெறியாளருக்கும் தெரியாத குற்றம் உனக்குத் தெரிந்துவிட்டது? கோல்வளையாக் கோனாட்சி செலுத்தும் சோழன் யாருக்கு எந்த நேரத்திலே நீதி வழங்கத் தவறிவிட்டான்? அறம் செய்யத் தவறினானா? புறங்காட்டி ஓடினானா? அடுத்தவர் துயருற்றபோது துணை செய்ய எடுத்த கையைத் தடுத்து நிறுத்தினானா? புலமையைப் போற்ற மறந்தானா? என்ன குற்றம் செய்தான், ஏந்திழையே? என்ன குற்றம் செய்தான்?''

''போதுமடி, அவன் வீரம்! ஆளும் காவிரி நாடன் அவன் முன்னோருக்கு அடுக்காத செயலொன்றைச் செய்து விட்டான்; அதனால் தீராத களங்கம் வந்து சேர்ந்து விட்டது. ஆமாம். அளவோடு வரிகொள்ளத் தவறி விட்டான் உங்கள் அருமை மன்னன்!''

''வரி பெறுவதிலே தவறிழைத்தானா? புலிக்கொடி பறந்திடும் பொன்னாட்டிலே வரிச்சுமை இதுவரை வாட்டியதில்லை என்பதுதானே வரலாறு! என்ன இன்று புதிரான செய்தியை எடுத்து விரித்திருக்கிறாய்? புரியத்தான் சொல்லேன்!''

''தேன் குழல்! உனக்குத்தான் தெரியுமே! வற்றாத காவிரி பாயும் சோழ வளநாட்டு மக்கள் இதுவரை ஆறிலொரு பங்கைத்தானே வரியாகச் செலுத்தி வருகிறார்கள்? ஆனால் தீரா விருப்பக்காரன் உங்கள் வளவன் இப்போது அம்மரபிலிருந்து பிறழ்ந்து வரிக்கொள்ளையிடுகிறான்; மிச்ச மீதமின்றிப் பொருள்களைக் களவாடிச் செல்கிறான்!''

''எங்கே எழில்வளை? யாரிடமிருந்து பறித்தான் அப்படி? உன் தந்தையிடத்திலா? அல்லது உன் தாய்மாமன் வீட்டிலா? விளங்கத்தான் சொல்லேன்!''

''தந்தையிடமிருந்து பறித்தாலென்ன? என்னிட மிருந்து பறித்தாலென்ன? கொள்ளும் வகையிலே மன்னன் பெருங் கொடுமைக்காரனாகி விட்டான்!''

''உன்னிடமா? நீ எப்பொழுது வரி செலுத்தத் தொடங்கினாய்? என் அன்புத் தோழியே! அப்படி நீ என்ன தொழில் செய்கிறாய்?''

''ஆமடி! சோணாடன் நம் வீதி வழியே உலா வந்த போது, என் காதற்களத்திலே புகுந்தது மட்டுமின்றி, நான் நலமுடன் பயிரிட்டு வந்த உள்ளம்,நாணம், அழகு ஆகிய அணிகலன்களை யெல்லாம் முறை தவறிப் பறித்துச் சென்றானடி! அதனால் நான் இங்கே பித்துப் பிடித்து வாடுகிறேன்; இது அடுக்குமா? நீயே சொல்! புனல்நாடன் எனக்கு இழைத்த இந்தப் பொல்லாங்கினை எப்படிப் பொறுத்துக் கொள்ள முடியும்? ஐயோ! அறம் என்பதே இனி அழியத்தான் வேண்டுமா?''

''ஓகோ! வழக்கு இப்படிப் போகிறதா? இரு. இரு; இதோ ஒரு நொடியில் வந்துவிடுகிறேன்''.

'கலகல' வென்று வெண்முத்துப்பல் ஒளிரச் சிரித்துக் கொண்டே ஓடிய தேன்குழல், கொஞ்ச நேரத்திற்குள் எழில்வளையின் அன்னையிடம் எதையோ கூறிக்கொண்டிருந்தாள்!

**'என்நெஞ்சு நாணு நலனு மிவையெல்லாம்**
**மன்னன் புனனாடன் வெளவினான் – என்னே,**
**அரவக லல்குலாய்! ஆறிலொன் றன்றோ**
**புரவலர் கொள்ளும் பொருள்.'**

**– முத்தொள்ளாயிரம்.**



# ஏன் அழவில்லை?



பறை ஒலி எழுந்து விட்டது.

கல்லெறிபட்ட ஆலமரத்துக் காக்கைகள் ஒருங்கே கூடிச் சத்தமிடுதல் போல, அந்த வீட்டில் ஒப்பாரி ஒலியும் உடன் எழுந்தது. நேற்று வரை ஓடி ஆடிய முதியவன் ஒருவன் காற்றில் பறந்துவிட்ட இறகைப் போல் எங்கோ போய்ச் சேர்ந்துவிட்டான்.

துடித்த அவன் இதழ்கள் துவண்டு கிடந்தன.

நெடிதுயர்ந்த தோள்கள் சாய்ந்து கிடந்தன.

ஓடி ஆடிய கால்கள் ஒடுங்கி நின்றன.

இறந்துபோன பூச்சியைச் சுற்றி எறும்புக் கூட்டம் மொய்ப்பது போல், மறைந்து விட்ட அவன் உடலைச்

சுற்றிக் கொண்டு, இருந்த ஊர்ப் பெண்டிரெல்லாம் ஓல மிட்டார்கள்.

அவன் வாழ்ந்த கதை, ஒவ்வொரு பெண்ணின் வாயிலிருந்தும் அற்புதமான ஒப்பாரிக் காவியமாக உருவெடுத்தது. எதுகையும் மோனையும் இசைநயமும் அவர்கள் பாடலில் இழைந்து நின்றன.

பெண்களின் இந்த ஒப்பாரி ஒலி கேட்டு கரையாத ஆண்களின் நெஞ்சங்களும் கரைந்தன. அழுதே அறியாத இறந்தவனின் மகனான காளைக்கும் அழுகை பீறிட்டு வந்தது. தன் மார்பில் தவழ்ந்த மேல்துண்டை வாயில் அடைத்து அழுகையைத் தணிக்க முயன்றான். ஆனால் அவனுடைய தொண்டையிலிருந்து எழுந்த அழுகை யொலி தடையை மீறி வெளியேறியது.

இதைக் கண்ட அவனுடைய உறவினர்கள் அவனைக் கட்டிப் பிடித்துக் கொண்டு ஆறுதல் கூற முனைந்தார்கள். ஆனால் அவர்கள் கூறிய தந்தையைப் பற்றிய புகழுரைகள் அவன் துயரை மிகுதியாக்கின. பாவம், அவன் அழுவதைக் கண்டு ஆறுதல் கூற வந்தவர்கள் தாமும்

அழுது ஓலம் எழுப்பினார்கள். இப்போது அந்த வீட்டில் அழுகைச் சத்தம் இருமடங்காகி விட்டது.

பாய்ந்து விழும் அருவியோசை மலைச் சூழலையே சத்தத்தில் ஆழ்த்துவதைப் போல், ஓய்தல் இன்றி எழுந்த ஒப்பாரி ஒலி அந்த ஊரையே கலக்கிற்று. எல்லோருடைய முகங்களிலும் சோகத்தின் சாயை கவ்விக் கிடந்தது.

அந்த நேரத்தில் ஒருபுலவர் ஊருக்குள் நுழைந்தார். அவர் ஏறெடுத்துப் பார்த்த முகங்களெல்லாம் எழிலிழந்து களையிழந்து காணப்பட்டன.

மெல்ல நடந்து, 'கல்' லெனும் ஒலியெழும்பும் அந்த இறந்தவன் வீட்டுக்கு வந்தார். நேற்று வரை அவரைப் புன்னகையுடன் வரவேற்றவர்கள், இன்று காற்றுக்கு வளைந்துவிட்ட நாணலைப்போல் தலைகுனிந்து வர வேற்றார்கள்.

கூற்றுக்கு விருந்தான அந்தக் கிழவனின் மகனும் விழிகள் சிவக்கக் கேவிக் கேவி அழுது கொண்டிருப்பதை அவர் பார்த்தார்.

"ஐயோ , இவர் செத்து விட்டாரே! இனி நாங்கள் என்ன செய்வோம்?" இப்படி அங்கே இருந்தவர்கள் கதறிக் கொண்டே புலவரைத் தழுவிக் கொண்டார்கள்.

"அமைதியாக இருங்கள். அவல ஒலியைக் குறையுங்கள். புரண்டு புரண்டு அழுதாலும் போய் விட்டவர் திரும்பியா வருவார்? காட்டாற்று வெள்ளத்திலே கலந்து, அடித்துச் செல்லப்பட்ட வைக்கோல் மீண்டும் திரும்பிவந்து கரையேறுதல் உண்டா?" தமக்கே உரித்தான தண்மை நிறைந்த சொற்களால் அவர் சூழ்ந்திருந்தவர்களை அமைதிப் படுத்த முயன்றார்.

ஆனால், கூடி இருந்தோரில் யாரும் அவருடைய அறவுரையை அப்படியே ஏற்றுக்கொண்டு, வழிந்தோடும் விழிநீரைத் துடைத்துக் கொள்ளவில்லை.

புலவர் மேலும் பேசினார்: "நிறைந்த நெஞ்சோடு, வாழ்த்து மண்டிய புகழோடு மறைந்த இவருக்காகவா நீங்கள் அழுகிறீர்கள்? நான் உங்களைப் பார்த்து இரக்கப்படுகின்றேன். இது எனக்கு வேடிக்கையாக உள்ளது!"

அந்தப் புலவர் இன்னும் சொற்களை முடிக்க வில்லை. அதற்குள் ஒருவன் தாளாச் சினத்தோடு புலவர் உரையில் தலையிட்டான்.

''போதுமய்யா, உங்கள் பொன்னான உபதேசம்! ஆனானப்பட்டவரே நெடுந்துயிலில் ஆழ்ந்து விட்டார். ஆலமரமாக வாழ்ந்தவர், அடிவேர் அற்றுவிழ, அமைதியில் கலந்து விட்டார். சொல்லுக்குச் சொல் வெல்லமும் பாகும் கலந்து சுவை சொட்டப் பேசும் அந்தச் சுடர் முகத்தை இனி நாங்கள் காணமுடியுமா? தூய தொண்டால் ஆயிரமாயிரம் நெஞ்சங்களைச் சுண்டியிழுக்கும் அந்தச் சொக்கத் தங்கத்தை இனி நாங்கள் பார்க்க முடியுமா? சிரிக்கச் சிரிக்கப் பேசி எங்கள் சிந்தையை உவகையால் துள்ள வைக்கும் அந்தச் சீரிய காந்தம் எங்கே? இவைகளை நினைத்து நாங்கள் அழவே கூடாதா? ஓடிய அவரைத் தேடி ஓடத்தான் முடியாதென்றால், விழிநீரையுமா ஓடவிடக் கூடாது? நேற்றுவரை அன்பால் எங்களைக் குளிப்பாட்டியவரை இன்று நாங்கள் கண்ணீரால் குளிப்பாட்டுவதற்கும் தடையா? எது வேடிக்கை, புலவரே? எது வேடிக்கை?''

புலவர் உதடுகள் புன்னகையை உதிர்த்தன.

சிறிய விளக்கை ஊதி அணைத்துவிடலாம்; பெரிய நெருப்பை ஊதுவதால் இன்னும் பற்றித்தானே எரியும்!

ஆனாலும் புலவர் மனம் தளரவில்லை. எப்படியும் சோகம் கப்பியிருக்கும் அந்தச் சூழ்நிலையை, ஓரளவு மாற்ற முடியுமா என்று எண்ணமிட்டார்.

''கேள்விக் கணைகளால் என்னைத் துளைத்த நண்பரைக் கேட்கிறேன்; எனக்கொரு ஐயப்பாடு எழுகின்றது. அருள்கூர்ந்து அதைத் தீர்த்து வைக்க முடியுமா, என்று கேட்க விழைகிறேன்,'' என்றார்.

உடனே ஆத்திரம் இழையப் பேசிய அந்த மனிதன் முன்னே வந்தான். ''என்ன வினா என்னைக் கேட்கப் போகிறீர்கள்? இறந்தவரைப் பற்றி ஏதேனும் ஐயம் உண்டா? எங்கே உங்கள் கேள்வி? இப்போதே பதில் கூறக் காத்திருக்கிறேன்'' என்றான் படபடப்புடன்.

''கிண்டலுக்கும் கேலிக்கும் கேட்கவில்லை நண்பரே! நீங்கள் செத்து விட்டதாகக் கூறப்படும் இவர்

உண்மையில் இப்போதுதான் செத்தாரா? பதில் கூறுங்கள்.'' இது புலவர் கேள்வி.

''ஆம். அடிப்படையிலேயே உங்களுக்கு ஏன் இந்த ஐயம் எழுந்தது? தொட்டுப்பாருங்கள், மூச்செழவில்லை. துடித்த திருமேனி குளிர்ந்து விட்டது; இன்னும் ஏன் கேள்வி?''

''இன்னொன்றைக் கேட்க விரும்புகிறேன், அவர் செத்து விட்டார்; உண்மை. ஆனால் இங்கே இருக்கும் நீங்கள் இன்னும் சாகாமல் இருக்கிறீர்கள் என்று உறுதியாகக் கூறமுடியுமா?''

''என்ன குழப்புகிறீர்கள்?'' இந்தக் கேள்வி அனைவரின் தொண்டையிலிருந்தும் ஒரே நேரத்தில் வெளிவந்தது.

''ஆமாம். நண்பர்களே! நீங்களும் செத்து விட்டவர்கள் தாம். அதற்கேன் அழாமல் இருக்கிறீர்கள்?''

''செத்துவிட்டோமா? என்ன பேசுகிறீர்கள்?''

''நான் உங்களைக் குழப்பவில்லை; உண்மையைச் சொல்கிறேன். நீங்கள் ஒரு முறையல்ல, பலமுறை

செத்திருக்கிறீர்கள். ஒவ்வொரு முறையும் அழாமல் இருந்திருக்கிறீர்களே, அதற்காகச் சிரிக்கிறேன்!''

''விளக்கமாகக் கூறமாட்டீர்களா?''

''விளக்குகிறேன். அன்னை வயிற்றிலே கருவாக உருவெடுத்த நீங்கள், அந்நிலையிலிருந்து செத்து, குழவியாக மாறிப் பிறந்தீர்கள்; சின்னஞ்சிறு குழந்தைப் பருவம் செத்த பிறகு சிறார்ப்பருவம் பெற்றீர்கள்; அந்தப் பால உருவம் செத்த பின்னர், காளை உருவாய்ப் பிறந்தீர்கள்; காளைப்பருவம் செத்த பின்னால், மூப்புப் பருவம் எய்தினீர்கள்; இப்படி உங்கள் வாழ்க்கையில் ஒவ்வொருவரும் எத்தனை முறை செத்திருக்கிறீர்கள்? அப்படியானால் நாளும் நாளும் சாகின்ற உங்களுக்காக நீங்கள் ஏன் ஒவ்வொரு முறையும் அழவில்லை? உங்கள் பரிதாப நிலைகண்டு நான் ஏன் சிரிக்கக் கூடாது?''

புலவர் உரையைக் கேட்டோரின் முகங்களில் சிந்தனைக் கீற்றுகள் அல்லிக்கொண்டன. விழிநீரை மெல்லத் துடைக்கலானார்கள் அவர்கள்.

'பாளையாம் தன்மை செத்தும்,
பாலனாம் தன்மை செத்தும்,
காளையாம் தன்மை செத்தும்,
காமுறும் இளமை செத்தும்,
மீளும்இவ் வியல்பு இன்னே
மேல்வரும் மூப்பும் ஆகி,
நாளும்நாள் சாகின் றாமால்!
நமக்குநாம் அழாத தென்னோ?

— குண்டலகேசி.



# இரண்டுமே தொல்லை

''இனிமை! எழிலே உருவெடுத்து வந்த ஏந்திழையே! துயர்மண்டிய நிலையில் ஏன் காணப் படுகிறாய்? தென்பாண்டிநாட்டிலே வாழ்பவர்க்குக் குறை என்பதும் உண்டோ?''

''கிள்ளை! மீட்டும் மீட்டும் என்னை ஏதேதோ கேட்டுத் தொல்லை கொடுக்க வேண்டாம். தனியே என்னை விட்டுச் செல். அதுபோதும் எனக்கு!''

''வளமார் வைகையிலே புதுப்புனல் பெருக் கெடுத்தால் நீ தானே எல்லையற்ற மகிழ்வுடன் ஓடி வருவாய்; நீரிலே மூழ்கி மூழ்கி எழுந்து, நெஞ்சமெல்லாம் உவகை கொள்வாயே! எனவேதான் உன்னை அழைக்க வந்தேன். பொதிகையின் வையை பூரிப்புடன் பெருகி வரும் காட்சியை வந்து பார். பிறகு...''

''ஒன்றும் வேண்டாமடி. நான் நீராடுவதற்கு வருவதாக இல்லை; இனி எப்போதும் வரப்போவதும் இல்லை!''

''ஏன்? வெள்ளத்தைக் கண்டு அஞ்சி நடுங்கு கின்றாயா? வெற்றி நிறை வேப்பந்தார் சூடிய பாண்டியன் மாறனின் நாட்டிலே நீ வாழ்வதற்கே தகுதியில்லையடி!''

''போதுமடி! பொல்லாத உண்மையைக் கண்டு பிடித்து விட்டாய். அச்சம் என்பது தென் பாண்டியிலே மடிந்து ஆண்டுகள் பலவாகின்றனவே! குமரியாட வருவதற்கு என்னால் இயலாது!''

''ஏன் இனிமை? ஏதேனும் உடற் காய்ச்சலா? இதை ஏன் எனக்கு முன்பே உரைக்கவில்லை? மருத்துவர் வந்தாரா? மருந்து கொடுத்தாரா?''

''கிள்ளை, அடுக்கிய கேள்விகள் போதுமடி! உடற் காய்ச்சலுமில்லை, ஒன்றுமில்லை! என்னால் வையைக்கு வர விருப்பம் இல்லை, அவ்வளவுதான்.''

''ஏனிந்த மாற்றம்? வளங்கொழிக்கும் வையைப் பேராறு நேற்றுவரை உனக்கு அளவிறந்த உவகையை அள்ளி அள்ளித் தந்தது; இன்றோ அதே வையை உனக்கு நஞ்சாகத் தோற்றமளிக்கிறதா? நீ உண்மையிலேயே விந்தைக்குரிய பிறவிதான்!''

''ஆராய்ச்சி முடிந்ததா? அல்லது......''

''பின் என்ன, இனிமை? புனலாட வா என்று பூரிப்புடன் அழைக்கிறேன் நான்; நீயோ அனல் கக்கும் முகங்காட்டி அப்புறம் போ என்கிறாயே! புரியாத புதிராக ஏன் மாறி வருகிறாய்?''

''சினம் கொள்ள வேண்டாம், கிள்ளை! உன்னிடம் சொல்வதில் என்ன இருக்கிறது? சொல்கிறேன் கேள். வையைக்கு வந்து நான் நீராடுதல் என் செவிலித் தாய்க்குப் பிடிக்கவில்லை. ஐயக் கண்களோடு நோக்கு கிறார்கள்.''

''ஏன்?''

''சுழித்தோடும் வைகைப் பேராற்றில் நான் துதைந்து துதைந்து நீராடுவேன்; அதனிடம் வாழுகின்ற கயல்களைக் காட்டிலும் துள்ளித் துள்ளி மகிழ்வேன்.

அதனால் என் விழிகள் அந்திவான் போன்று சிவந்து விடும். இதைக் கண்டு என் செவிலித் தாயார், 'இவள் பாண்டியன் மாறன்மீது எவ்வளவு காதல் கொண்டிருக்கிறாள்? அதனால் அல்லவா அவனுடைய வையைப் புனலில் மூழ்கி மூழ்கி எழுகிறாள்!' என்று ஏசுவார்கள்; எள்ளுவார்கள்.''

''அப்படியா?''

''அதோடு மட்டுமா? அப்படியே என்னை இள வயது முதல் இன்பத்திலே ஆழ்த்திய வைகையை மறந்து அதன் பக்கமே செல்லவில்லை என்று வைத்துக் கொள். அப்பொழுதும் தொல்லை வந்து சேருகிறதடி!''

''எப்படி...?''

''அந்த நிலையிலும் என் செவிலித் தாயார், 'இவள் வையைப் புனலின் பக்கமே செல்வதில்லை; ஏன் தெரியுமா? இவள் வையைக் கோமான் மீனவனின் மேல் வைத்துள்ள எல்லையற்ற காதல் எங்கே வெளிப்பட்டு விடுமோ என்று அஞ்சுகிறாள். ஆகவேதான் பூநாறும் நீர் கொணரும் வையையை ஏறெடுத்தும் பாராதவள் போல்

நடிக்கிறாள்!'' என்று ஏசுதல் கணைகளை ஏவுகிறார்கள்; இப்பொழுது சொல்! வாழ்வு பெருக்கும் வையை எனக்கு மட்டும் தீங்கு செய்யவில்லையா? அதிலே நீராடினாலும் குற்றம்! ஆடாவிடினும் குற்றம்! அடுக்குமா இது?''

இனிமையின் இந்தப் பதில், கிள்ளை வாயினை அடைத்து விடுகிறது.

இந்த விந்தைமிகும் செய்தியைக் கூறிய தலைவியுடன் கிள்ளை சோர்வாக அமர்ந்து விடுகிறாள்.

**'ஏற்பக் குடைந்தாடில் ஏசுவர்; அல்லாக்கால்**
**மாற்றியிருந்தாள் எனவுரைப்பர்–வேற்கண்ணாய்!**
**கொல்யானை மாறன் குளிர்புனல் வையைநீர்**
**எல்லாம் எனக்கோர் இடர்!'**

**– முத்தொள்ளாயிரம்.**




'ஒரு கன்னத்தில் அடித்தவனுக்கு மறு கன்னத்தைக் காட்டு!' என்றார் அருமை மிகு ஏசுபிரான்.

'தீமை செய்தவனுக்கு உரிய தண்டனையை உடனே வழங்குங்கள்; அது என்ன தெரியுமா?' என்று கேட்டார் வள்ளுவர்.

திகைப்போடு கேட்டது வையம்.

'தீமை செய்தவனின் முகம் சிவந்து நாணும்படி, அவனுக்கு நன்மை செய்தலே அவனுக்குத் தரவேண்டிய பெரிய தண்டனை!' என்றார், அறத்துறைக்கே புதுப் பொருள் சமைத்த அந்த இலக்கிய மேதை.

ஊர்ந்து வரும் எறும்பொன்றுக்கு ஊறு விளைவித் தாலும் உடனே தன் சின்னஞ்சிறு வாயால் கடித்து உற்ற தண்டனையைத் தந்துவிடுகிறது அது!

ஓடிவரும் காட்டாறு, உடல் வணங்கும் நாணலை விட்டு விட்டு, ஓட்டத்தைத் தடுக்கின்ற அணையை உடைத்தெறிந்து தண்டனை வழங்குகின்றது.

ஆனால் மனிதனும் இப்படி இருக்க வேண்டுமா?

நெஞ்சப்பண்பால் உயர்ந்து நிற்கும் நெடும்புகழ்த் தமிழ்ச் சான்றோர், மனிதனுக்கும் மற்றவற்றிற்கும் வேற்றுமை இருக்கவேண்டும் என்றார்கள்.

ஒரு தீமைக்கு மற்றொரு தீமையைப் பண்டமாற்றுச் செய்வதால் உலகில் குழப்பங்களே மலிந்து நிற்கும் என்பது அவர்களின் கண்டுபிடிப்பாக இருந்தது.

'ஒரு கொள்ளிக்கட்டையை அணைக்க, மற்றொரு கொள்ளிக்கட்டையைப் பயன்படுத்தலாமா?' என்பது தான் அவர்களின் வினா!

இந்த வியத்தகு தத்துவம் விரிந்து உலகெங்கும் மணம் பரப்புமானால் தன்னலமும் சச்சரவும் என்றைக்கோ சாக்காட்டுக்கு ஏகியிருக்கும்!

அவர் ஒரு தண்டமிழ்ப் புலவர்; அறுபதைத் தாண்டிவிட்ட அகவை உடையவர்.

தன் இரு கால்கள் தடுமாறுவதால், செயற்கைக் காலாகத் தடியை ஊன்றிக்கொண்டே நடந்து வந்தார்.

வாடிய அவர் மேனியின் கோடுகள் நிறைந்த வெளித் தோற்றம், வெடிப்புகள் கொண்ட கோடைக்கால வண்டல் மண்ணை நினைவூட்டிற்று.

வளைந்த அவருடைய உடல் முதிர்ந்த நெற் பயிருக்கு உவமையாக இருந்தது.

ஊனும் உயிரும் நோக, கானும் மலையும் கடந்து வந்த அவர் ஏதேனும் உண்டு பசியார, விழிகளை ஓட்டினார்.

கொஞ்ச தூரத்தில் ஒரு நாவல் தோப்பு தென்பட்டது. அங்கே மாடு மேய்க்கும் சிறுவன் ஒருவன், ஒரு மரத்தில் ஏறிக்கொண்டிருந்தான்.

புலவர் நெஞ்சில் இன்பப் புனல் பாய்ந்தது. அருகே நெருங்கினார்.

நாவல் மரத்திலே தாவி ஏறிய சிறுவன், கனிந்த பழங்களைக் கொத்துக்கொத்தாகப் பறித்து வாயிலிட்டுச்

சுவைத்துக்கொண்டிருந்தான். கொட்டைகள் மட்டும் தரையில் வந்து விழுந்து கொண்டிருந்தன.

பச்சை இலைகளுக்கிடையே பழுத்துக் குலுங்கிய நாவற் கனிகள், ஆயிரம் கண்பெற்ற உருவத்தை அந்த மரத்திற்கு நல்கியிருந்தது.

வந்த கிழவர், வாடிய முகத்தை நிமிர்த்தி, மரத்தை அண்ணாந்து பார்த்தார்.

இளவேனிலின் தொடக்கத்தில் வளமார் மாம்பூவை மூக்கால் கொத்திக் கிளறும் குயிலைப்போல், நாவல் மரத்தின் உச்சங்கிளையில் இருந்து தன் மனம் போன போக்கில் கனிகளைப் பிய்த்துக் கொண்டிருந்தான் அந்த மாட்டுக்காரச் சிறுவன்.

''தம்பீ!'' இப்படி மெல்ல அழைத்தார் பெரியவர். கிளையை ஊஞ்சலாக்கி, ஆடிக்கொண்டிருந்த அவன் காதில் அந்தக் கிழவரின் குரல் எங்கே விழ முடியும்?

மீண்டும் சற்று உரக்க அழைத்தார் அந்த முதியவர். இப்போதும் அந்தச் சிறுவன் கேட்டும் கேட்காததுபோல் தன் போக்கில் ஆடிக்கொண்டிருந்தான்.

கனிந்து குலுங்கி நின்றது மரம்; கிளையெல்லாம் கொத்துக் கொத்தாகக் கனிகளைச் சுமக்கின்ற அந்த மரத்தால், வதங்கிய அந்தக் கிழவரின் பசியைத் தணிக்க முடியவில்லை.

அவர் ஏக்கத்தோடு, ''தம்பி! கொஞ்சம் நாவற் கனிகளைப் பறித்துப் போடுவாயா? பசி குடலைப் புசித்து விடும்போல் இருக்கிறது'' என்றார்.

சிறுவன் சிரித்தான். ''ஏன்? ஏறி வந்து பறித்துத் தின்பதுதானே!'' இப்படிக் கிண்ணாரத்துடன் அந்தக் கிழவனைப் பார்த்துக் கேட்டான்.

இதைக்கேட்ட புலவரின் முகத்தில் மேலும் சுருக்கக் கோடுகள் கோலமிட்டன.

''எல்லாருமே முத்துக் குளிப்பவர்களாகி விட்டால், கொற்கை முத்துக்கும் கூழாங் கல்லுக்கும் வேற்றுமை ஏது?'' இப்படி முணுமுணுத்தன அவருடைய உதடுகள்.

''தம்பீ! என்னால் ஏறிவர இயலாது. அதனால்தான் கேட்கிறேன்; நான்கு கனிகளைப் பறித்துப்போடு. அவை போதும்,'' இது அவரின் கெஞ்சல்.

''அதற்கு நான் என்ன செய்ய முடியும்? நீங்கள் என்வயதில் இருக்கும்போது மரத்தில் ஏறிப்பழத்தைத் தின்றிருப்பீர்கள் அல்லவா? அது போதுமே! இப்போது உங்களுக்கு ஏன் இந்த நாவற்பழ ஆசை?'' வெந்த அவருடைய நெஞ்சத்திற்கு மேலும் வேதனையூட்ட அவன் வாதாடினான்.

கிழவருக்கும் அந்தச் சிறுவனுக்கும் இடையே நடைபெற்ற உரையாடலைக் கொஞ்சதூரத்தில் வயலை உழுது கொண்டிருந்த உழவன் ஒருவன் கேட்டுக்கொண்டே இருந்தான்.

எட்டுவயதுச் சிறுவனுக்கும் எண்பது வயதுப் பெரியவருக்கும் நடைபெறும் வாக்குவாதத்தைக் கேட்டதும், அந்தச்சிறுவனின் முதுகில் ஓங்கி அறையலாமா என்ற ஆத்திரம் அந்த உழவனுக்கு ஏற்பட்டது.

கிழவனின் கெஞ்சுதலும், சிறுவனின் மிஞ்சுதலும் உழவனின் பொறுமையை இழக்கச்செய்தன.

''நட்ட நடுப்பாதையிலே நாவல் மரம் நற்சுவைக் கனிகளுடன் குலுங்கிக் கொண்டிருக்கிறது; அதற்கு இந்தச் சின்னஞ்சிறுவன் வேலியாக அமைவதா?'' என்ற சினத்துடன் அருகே வந்தான் அந்த உழவன்.

''மடச்சிறுவனே! பழுத்து நிற்கும் இந்த மரம் என்ன உன் பாட்டன் சம்பாதித்த சொத்தா? உன்னை என்ன செய்கிறேன், பார் !'' என்று சொல்லிக்கொண்டே கீழே கிடந்த கூழாங்கற்களைப் பொறுக்கி, சிறுவன் மீது குறி வைத்தான் அந்த உழவன்.

''என்ன செயல் செய்யத் துணிந்தாய்? சின்னஞ் சிறுவன்தானே அவன். காய் துவர்க்கத்தானே செய்யும்; அதை அறுத்துவிட்டால் இனிக்கும் கனி கிடைக்குமா? அடிக்காதே அவனை; விட்டு விடு'' என்று கெஞ்சினார் கிழவர்.

''இல்லை, பெரியவரே! தொல்லையோடு நடந்து வந்த தாங்கள் பசிக்குத்தானே பழம் வேண்டிக்

கேட்டீர்கள்; ஆனால் இந்தச் சிறுவன் கேலியும் கிண்டலுமல்லவா செய்கிறான்? இவனை எப்படிச் சும்மாவிட முடியும்? இவனுக்குரிய தண்டனையை வழங்கியே தீரவேண்டும்!'' இன்னும் அந்த உழவனின் உடற்சூடு குறையவில்லை.

''மகனே! அறியாதான் தீய சொல்லைக் கூறி நம் நெஞ்சைச்சுட்டால், நாமும் திருப்பித் தீமையே விளைவிக்க வேண்டுமென்பது இல்லை; ஓடி வந்து பாய்ந்து நம் உடலைக் கடிக்கின்ற நாயின் பின்னால் நாமும் விரட்டிச்சென்று அதைப் பிடித்துக் கடிப்ப துண்டா?'' இப்படித் திருப்பிக் கேட்டார் அவர்.

அறிவால் உயர்ந்தோரின் அகத் தோற்றத்தைக் கண்டு வியப்போடு திரும்பினான் அந்த உழவன். திருந்திய சிறுவனின் கைகள் கிளையைப் பிடித்து ஓங்கி அசைத்தன.

தித்திக்கும் கரு நாவற் கனிகள் ஆலங்கட்டி மழை போல் உதிர்ந்தன. கிழவர் சிரித்துக்கொண்டே எடுத்துச் சுவைத்தார்.

'கூர்த்துநாய் கௌவிக் கொளக்கண்டும் தம்வாயால்
பேர்த்துநாய் கௌவினார் ஈங்கில்லை -நீர்த்தன்றிக்
கீழ்மக்கள் கீழாய சொல்லியக்காற் சொல்பவோ
மேன்மக்கள் தம்வாயால் மீட்டு?'

-நாலடியார்.






அந்த அரும்பு அழகிதழ் விரித்து மலர்ந்திருந்தது. திரும்பிப் பாராமல் சென்ற விழியெலாம் அந்தத் தேன் மலரின் திக்கிலே திரும்பின.

நேற்றுவரை சிட்டைப்போல், காற்றாகச் சுற்றிவந்த அந்தச்சிறுமி ஏதோ ஒரு மாற்றம் பெற்று விட்டாள்!

எங்கிருந்தோ வந்து அவளிடம் இறக்குமதி ஆகிவிட்ட அந்தப்பொல்லாத நாணம், அவள் திங்கள் முகத்திலே வெட்கப் போர்வை விரிப்பானேன்?

முந்திய நாள்வரை எந்த மனிதரைக் கண்டாலும், 'எடுத்தேன், கவிழ்த்தேன்' என்று பேசிய அவள் ஏன் இப்பொழுது அந்தி கண்ட தாமரைப் பூப்போல் அடங்கி விட்டாள்?

அலையெழுப்பும் ஒலியாய், யாருடன் பேசினாலும் கலகலவெனச் சிரிப்பொலி எழும்புமே, அந்தக் கள்ளமில்லா ஓசை எங்கே சென்று அடங்கிவிட்டது?

ஆம்! 'ஆளாகி விட்டாய் நீ!' என்று தோழியர் அவளிடம் எடுத்துச் சொன்னார்கள்.

புரியவில்லை அந்தப் பூவைக்கு.

'பருவம் உன்னைத் தன் பாசக் கரம் நீட்டித் தழுவிக் கொண்டது' என்றனர் அருகிருந்த மங்கையர்.

பாவம். முதலில் அதற்குரிய பொருள் புரியாமல் திகைத்தாள் அந்தக் கன்னி!

ஓரிரு மாதங்கள் உருண்டோடி மறைந்தன.

காலச்சிற்பி அவள் உருவத்திலே கோல எழிலைக் கூட்டிச் செதுக்கி விட்டான்.

அப்பப்பா! அவள் உடற்போக்கிலே எத்தனை மாற்றங்கள் நிகழ்ந்து விட்டன?

உருவத்திலே மட்டுமா?

அந்த வண்ண மயிலின் எண்ணத்திரையிலே மின்னலிடும் காட்சிகளில் இப்போது தனித்திருப்பம் ஏற்படுவானேன்?

அறியாச் சிறுமியரை அணியாக்கிக்கொண்டு, அணிற்பிள்ளையைப்போல், தோட்டமெலாம் சுற்றி வந்து கனி வகைகளை மரத்தில் ஏறிப் பறிக்கும் அந்த இனிய காட்சிகளை இப்போது அவள் நினைத்துப் பார்ப்பதில்லை.

நெஞ்சை அள்ளும் அந்த வாவியில், நீர்ப்பாம்பு ஒன்று தலை உயர்த்தி நிற்பதைப்போல் காணப்படும் அல்லி மொட்டுக்களைக் கிள்ளியெடுத்து வந்து மற்றச் சிறுமியர் முகத்தில் வீசிப் பந்தாட்டம் ஆடுவாளே, அந்தக் காட்சியெல்லாம் இப்போது ஏனோ பிடிக்கவேயில்லை அவளுக்கு.

காணும் திக்கிலேயே அவள் கண்கள் பதிந்து கிடக்கின்றன.

வெட்ட வெளியைக் கொட்டக் கொட்ட அவள் வெறுமையுடன் பார்ப்பதைப் பற்றி, மட்டில்லா

வியப்போடு சுற்றியுள்ள தோழியர் விளக்கம் கேட்கிறார்கள் அவளிடம்.

பட்டாடை தவழும் அந்தப் பாவை, அதற்குரிய பதிலை எடுத்து வைக்காமல் பனி போன்ற மென் சிரிப்பை உதிர்த்துவிட்டு நழுவி விடுகிறாள்!

பருகுவதற்கேற்ற அருமையான பழச்சாற்றை, வைரமிழைத்த ஆடகப் பொற்கிண்ணத்திலே கொண்டு வந்து தருகிறார்கள் தோழியர்.

அவள் கொவ்வை உதட்டிலே அந்தக்கோப்பையின் விளிம்பு படும் போதே ஒவ்வாத கைப்பாக மாறுகிறது அந்தக் கனிச்சாறு!

''வேண்டாமிது; வேதனைப் படுத்தாதீர்கள்!'' என்கிறாள் அந்த வேல்விழி மங்கை.

சந்தனக் குழம்பை அள்ளி எடுத்து, அந்தச் செந்தமிழ்ச்சிலையின் தளதளக்கும் மேனியிலே தாதியர் பூசுகிறார்கள்.

''ஐயோ! எந்த நெருப்பாற்றிலிருந்து இந்த எரிக்குழம்பைக் கொண்டு வந்தீர்கள்? பட்ட

இடமெல்லாம் பற்றி எரிகிறதே!'' என்கிறாள் அந்த விந்தைப் பேரழகி.

'தண்ணீரை வெறுக்கின்ற கெண்டைமீன் உண்டா? தண்மை நிறைந்த சந்தனச்சேற்றை வெறுக்கின்ற தையலும் உண்டா?' என்று தங்கள் இமையை உயர்த்திவிட்டு நடக்கிறார்கள் வந்த பெண்கள்.

மாலை வருகிறது.

மங்கை நல்லாளின் அந்தத் தங்கஉடல்மீது சிங்காரத் 'தென்றல்' வந்து தழுவி விட்டுப்போகிறது.

பொதிகையின் சீதனமான அந்தப் பூமணத் தென்றல், சதிராடும் அந்தப்பெண்ணுக்கு மட்டும் கொதிஉலையின் வெப்பப் புகையாக மாறித் தாக்குகிறது!

வந்து வாரி அணைக்கும் அந்தத் தென்றலை, இன்று ஏனோ வாயாரத் திட்டித் தீர்க்கிறாள் அவள்.

பதிலுக்குப் பதில் பதம் பாடும் இணை மாங்குயில் களின் தாளந்தவறாத பாட்டோசை, குதிபோடும் அந்தக் குமரியின் நெஞ்சில் இப்போது ஏதோ ஓர்

இனந்தெரியாத பொறாமை உணர்ச்சியைக் கிளப்பி விட்டது.

உச்சங்கிளையில் அவை உட்கார்ந்து கொண்டு, அந்த ஒயில் மங்கையைக் கிண்டல் செய்வதாகவே அவள் பொச்சரிப்போடு முனகத் தொடங்கினாள்!

இருட்டலைகளை விரித்துக் கொண்டு ஆட்சிக்கு வந்தது இரவு.

பகலெல்லாம் அலைந்து இரைதேடிய பறவைகள் தம் சேக்கையிலே அடங்கிவிட்டன.

ஊரே ஓய்ந்து விட்டது.

உண்ணவே பிடிக்கவில்லையென்று உறங்கச் சென்றவள், எண்ணத் தேரேறி இன்ப உலா வருகிறாள்.

சேல்விழிகளின் இமைகள் மட்டும் மூடிக் கிடக்கின்றன. ஆனால் அந்தப் பால்வடியும் முகத்தின் பவளஉதடுகள் நெளிந்து துடித்துக்கொண்டே இருக்கின்றன.

அவள் ஒருத்தி மட்டும் படுத்திருக்கும் அந்த அறையிலிருந்து ஏதோ ஓர் உரையாடல் கிளம்புகிறது! கொஞ்சும் குரலில் பேசும் அந்தக் குயிலி, இடையே கலகலவெனச் சிரிக்கிறாள்.

எங்கிருந்தோ வந்திறங்கும் தங்க விமானத்திலிருந்து, சிங்கம் போன்ற அந்தத் தலைவன் அந்தப் பைங்கொடியை அள்ளி அணைத்துக்கொண்டு, பொங்குதமிழ்ப் பாட்டிசைத்துக் கொண்டே வான்வெளியில் பறக்கிறான்.

அவன் ஏதேதோ சுவையோடு கேட்கிறான்; அவள் முத்தை உதிர்ப்பதுபோல் மோகனச்சிரிப்பை உதிர்க்கிறாள்.

அறையில் எழும் சிரிப்போசையும் உரையாடலும் கேட்டு விரைந்தோடி வருகிறார்கள் செவிலியும், தோழியரும்.

என்ன அந்த வேடிக்கை?

அன்னக்கொடி மட்டும் கண்களை மூடிக்கொண்டு கனவுலகத்திலே புன்னகை புரிந்து கொண்டிருக்கிறாள்.

அவள் பூவிதழ்கள் மட்டும் நெளிந்து நெளிந்து ஏதோ பேசிக்கொண்டிருக்கின்றன!

''என்னம்மா இது? தன்னந்தனியே அப்படி என்ன புன்னகையுடன் பேசிக்கொண்டிருக்கிறாய்?'' இப்படி வியப்போடு கேட்கிறார்கள் அவர்கள்.

''என்னசொல்கிறீர்கள்? நானா பேசினேன்? நானா சிரித்தேன்?'' அந்தக் கன்னல் தமிழ் மங்கை விழித்த வுடன் இப்படி எதிர்க்கேள்வி போடுகிறாள்!

இதைக் கேட்டவுடன், வந்தவர்கள் ஒருவர் முகத்தை ஒருவர் வியப்போடு பார்த்துக்கொள்கிறார்கள்!

உளவியல் தெரிந்த செவிலித்தாய் மட்டும் பேசுகிறாள்: ''பூப்படையாத இளஞ் சிறுமியின் வாக்கும் செயலும் புளியங்காயின் ஓடும் காயும் போல ஒட்டி யிருக்கின்றன; ஆனால் பொல்லாத கன்னிப்பருவம் வந்து விட்டால், பூவையரின் சொல்லும் செயலும் புளியம் பழமும் அதன் ஓடும்போலத் தனித்தனியே பிரிந்து விடுகின்றன!''

கூடியிருந்த சேடியர், அந்தக் கூற்றில் இருந்த உண்மை நயம் கேட்டுக் குரலெடுத்துச் சிரிக்கிறார்கள்!

**'குழவிப் பருவம் நழுவுங் காலை**
**களிமிகு கன்னிய ருளமும் வாக்கும்**
**புளியம் பழமுந் தோடும் போலாம்!'**

**–மனோன்மணீயம்.**



# அலறிற்று சிலம்பு



அந்தப் பேரழகி சந்தப் பாடல் நடப்பதுபோல் தாளம் பிறழாமல் நடந்தாள்.

தந்தத்தால் செதுக்கப்பட்ட அந்தத் தையலின் மலர்ப் பாதங்களில் 'கலீர் கலீர்' என்று சிந்துப்பாடல் எழுப்பின காற் சிலம்புகள்!

கண்டான் காதலன்.

வண்டு காணாத மொட்டுமலர்ச் செண்டணிந்து, வாரி முடித்துச் செல்லும் அவள் அழகுத்தோற்றம் அவன் உள்ளத்தின் நாளங்களைக் கொண்டாட்டத்தில் ஆழ்த்தியது.

ஆனால் அதே நேரம், அவன் நெஞ்சத்தில் ஏதோ ஓர் இனந்தெரியாத அச்சத்தின் பீதி தலைதூக்கியது.

ஏன்?

ஆடிவரும் தென்றலான அந்தப் பேரழகியின் காலில் பாடிவரும் சிலம்பு, அந்தக்காளையின் காதிலே அழுகை ஒலியைப் பாய்ச்சிற்று!

அவள் இட்ட அடியை உயர்த்தி, எடுத்த அடியைப் பதிய வைக்கும் போது, அந்தப் பொல்லாத சிலம்பு, 'ஐயோ! ஐயோ!' என்று அலறியது. ஓயாமல் ஒப்பாரி வைக்கும் அந்தச் சிலம்பின் ஓலத்தை ஒட்டுக்கேட்டான் அவன். சிலம்பு அவன் செவிப்பறை அதிரும்படி கூறிற்று.

''இரக்கத்துக்குரிய இளைஞனே! எதிர்நோக்கியுள்ள பேராபத்தை இம்மியேனும் உணர்ந்தாயா நீ?''

உன் நெஞ்சத்தில் உலவிவரும் வஞ்சியவள் இன்னும் கொஞ்ச நேரத்தில் உன்னைவிட்டுப் பிரியப்போகிறாள்.

அவளை ஆபத்து ஒன்று அண்டிவிட்டது!

முதலில் அவளைத் தடுத்து நிறுத்து.

அவள் கால்களுக்குத் தடை போடு

இல்லையென்றால் உனக்கு அவள் இல்லை!''

சிலம்பொலி விளம்பிய அந்தத் தீயசெய்தி, அவன் உள்ளத்திலே செஞ்சூட்டை ஏற்றிற்று.

''ஏன்? ஏன்?'' என்று அவன் உதடுகள் துடித்தன.

'ஈர்ப்புச்சக்தி இல்லாவிட்டால் இந்த உலகம் இயங்குமா? எடுப்பில்லாக் கதிவரன் இல்லையென்றால் நிலவு ஏது? என் நெஞ்சுக்குள் நெஞ்சாகிவிட்ட அவள் இல்லை யென்றால் நான் எங்கே வாழ முடியும்?'

இப்படி அலையெனப் புரண்ட அச்ச உணர்வுகள் அவனை ஆட்டிப்படைத்தன.

''சிலம்பே! ஏன் இப்படி நஞ்சனைய வெஞ் செய்தியை என் செவியிலே பாய்ச்சுகிறாய்? பவள மல்லியின் இதழ்கள் பட்டாலும் துவண்டு சிவந்து விடும் அந்தத் தோகையின் பாதங்களை ஏன் தடுத்து நிறுத்தக் கூறுகிறாய்? மலரிதழ் தொட்டாலே வருந்தும் மெல்லடியில் வாட்டுகின்ற முள்குத்தினால் அவள் என்னாவாள் என்று அஞ்சச் சொல்கிறாயா? அல்லது

ஒளிரும் அவள் கால்விரல் நகங்களில் மாணிக்கம் இழைக்கப்பட்டிருக்கிறதென்று எண்ணி, ஏதேனும் கருநாகங்கள் அவள் காலைச் சுற்றிக்கொள்ளும் என்று கூற வருகிறாயா?'' இம்முறையில் விரிந்த அவன் இதழ்கள் துடித்து மூடின.

அந்தச்சிலம்பு நேரடியாகப் பதில் சொல்லாமல், ''ஐயோ, ஆபத்து! ஐயோ, ஆபத்து!'' என்று மட்டுமே அலறிக்கொண்டிருந்தது.

''தவளை அலறினால் மழை வரும் என்பார்கள். சாக் குருவி அலறினால் கேடுவரும் என்பார்கள். ஆந்தை அலறக்கேட்டால் ஆபத்து வரும் என்பார்கள். ஆனால் நீ ஏன் அலறுகிறாய் என்று சொல்ல மறுக்கிறாயே! நான் என்ன செய்வேன்?'' அவன் கைகளைப் பிசைந்து கொண்டான்.

வஞ்சி மட்டும் அந்த மலர் சூழ்ந்த சோலையில் கொஞ்சமும் கவலையின்றி நடந்து கொண்டிருந்தாள்.

வாய் கிழிய அலறிய சிலம்பு, அவள் விரைந்து நடக்கும் போது மேலும் மேலும் கதறிற்றே ஒழிய, அவன் கெஞ்சுதலுக்குக் கிஞ்சிற்றேனும் விடை கூறவில்லை.

அந்த அப்பாவிக் காதலன், பதறிக்கொண்டே ஆத்திரத்துடன் அந்தச் சிலம்பிடம் காரணம் கேட்டான்.

இறுமாப்புப் பிடித்த அந்தச் சிலம்பு, "நிறுத்து, நிறுத்து! ஆடி அசைந்து நடக்கும் அவளை உடனே முதலில் தடுத்து 'நிறுத்து!" என்று அடித்துக் கூறிற்று.

"ஏன்? அந்தத்திக்கிலே ஏதேனும் ஆபத்து சூழுமா?" அவன் பரிதாபத்துடன் இப்படி வினவினான்.

"எந்தத்திக்கில் அவள் நடந்தாலும் ஆபத்துதான்!" சிலம்பு இப்படிப் பதில் சொன்னது.

"**சீச்சீ!** சுற்றி வளைக்காமல் உரிய விடையைச் சொல்கிறாயா, இல்லையா?" இது அவன் கேள்வி.

நகைத்தது சிலம்பு.

''தெரிந்துகொள். அச்சு இல்லாமல் ஓடும் வண்டி ஆறு அடி தொலைவேனும் உருப்படியாய்ப் போய்ச் சேர்ந்ததுண்டா? அப்படித்தான் உன் அருமைக் காதலியும் இப்படியே நடந்து சென்றால், எதிர்பாராத அப்பேராபத்தைச் சந்திக்க வேண்டி வரும்!''

''உன் உவமைக்கும் அவள் செயலுக்கும் என்ன தொடர்பு?'' அவன் பரபரப்புடன் வினாக்கணையைத் தொடுத்தான்.

''இதோ பார்! பற்றுக் கோடில்லாத கொடி தரையிலே வீழ்ந்து சாய்வதில்லையா? அப்படித்தான் இந்தப் பாவையும் ஆகப் போகிறாள்!''

''ஆரூடம் வேண்டாம்; அதற்குரிய காரணம் தேவை'' அவனுடைய கொதிக்கும் மூச்சு இப்படிக் கேட்டது.

''உற்றுப்பார் உன் காதலியை! ஏன் நான் அவள் நடையை நிறுத்தவேண்டும் என்று அலறுவதன் காரணம்

புரியும். அச்சில்லா வண்டியாக அவள் இல்லையா? அதோ அவள் நடக்கிறாள். பொல்லாத பெரும் பாரத்தைத் தூக்கி நடக்கிறாள். ஆனால், அதைத் தாங்கப் பற்றுக்கோடு ஒன்று வேண்டாமா? அவள்
தாங்கப் பற்றுக்கோடு ஒன்று வேண்டாமா? அவள்
தனங்களெனும் பாரத்தைத் தாங்குவதற்கு அங்கே என்ன அந்தப் பளுவைத் தாங்க முடியும்? ஆகவேதான் அந்த இளங்கொடி இன்னும் சற்றுத் தொலைவு நடந்தால் முறிந்துவிடும் என்கிறேன் நான்! இதற்குப் பின்னரும் உன் நெஞ்சக் காவின் மயிலை இப்படியே நடக்கவிட்டால் இழப்பு உனக்குத்தானே!'' சிலம்பு இப்படிக் கூறி முடித்தது.

ஆபத்தை உணர்ந்த அந்தத் தலைவன், அவளை நோக்கித் தாவி ஓடினான். ஆம். சாயும் அக்கொடிக்குத் தளராத பற்றுக் கோடு கிடைத்து விட்டது.

இப்போது அவன் அவளைத் தாங்கிப்பிடித்துக் கொண்டான்; அப்பூங்கொடி அவன்மேல் படர்ந்தது. சிலம்போ வெட்கத்துடன் வாயை மூடிக்கொண்டது!

'உபய தனமசையில் ஒடியு மிடை நடையை

ஒழியும் ஒழியுமென ஒண் சிலம்பு

அபய மபயமென அலற நடைபயிலும்

அரிவை மீர்கடைகண் திறமினோ!'

—கலிங்கத்துப்பரணி.



# வென்றவன் யார்?



அது சோழனின் அரசவை.

புதுப்புதுத் திறைப் பொருள்கள் நாளும் நாளும் வந்து குவியும் பொலிவார்ந்த பேரவை அது.

புன்னகையைச் சிதறவிட்டு **மன்னன் கரிகாலன்** பூரிப்போடு அரியணையில் அமர்ந்திருந்தான்.

தன்னேரிலாத அவன் வீரத்தோடு எதிர்நீச்சல் போட முடியாத சிற்றரசர்கள், வரிசையாக வந்து தாள் பணிந்து, பொன்முடி தாழ்த்திக் கப்பம் செலுத்திச் சென்று கொண்டிருந்தார்கள்.

அப்போது விரைவாக உள்ளே நுழைந்தாள், சப்பிய பனங்கொட்டையின் தலையையொத்த வெண்ணிறக் கூந்தல் கொண்ட ஒரு கிழவி.

'வருக, புலமை மிகு தாயே!' என்று கையேந்தி வரவேற்றான் கரிகாலன். ஓடிவரும் ஆற்றுநீரை ஆடி வந்து வரவேற்று அழைத்துச் செல்லும் கடலலையை ஒத்திருந்தது அவன் விருந்தோம்பும் பண்பு.

நிலவைப்போல் குளிர் உமிழும் **வெண்ணிக் குயத்தி**யாரின் எழில்முகம், நெருப்பு உமிழும் பரிதியைப் போல் காணப்பட்டதைப் பார்த்துத் திகைத்தான் கரிகாலன்.

''ஏன் தாயே! இந்த மாற்றத்தோடு காணப்படு கின்றீர்கள்?'' இது புலிக்கொடியோன் தொடுத்த கேள்வி.

''மன்னா! என்ன சொல்வேன் நான்? நெஞ்சம் கற்பனை செய்ய முடியாதவையெல்லாம் இந்த நிலவுலகில் நிகழ்ந்து விடுகின்றன! பின் உள்ளம் எப்படி மகிழ்ச்சியோடு இருக்க முடியும்?''

வெண்ணிக்குயத்தியார் வெளியிட்ட தன் சொற்றொடரை முடிக்கவில்லை.

''என்ன நிகழ்ந்துவிட்டது, தாயே? இப்பொழுதே சொல்லுங்கள். என் வீரம் உங்களுக்குத் தெரியாததா? என் வெற்றி தாங்கள் அறியாததா? கூறுங்கள்,

கொடுமையைச் சிதைத்துக் கூறு கூறாக்குகிறேன்!''
ஆவேசத்தோடு துடித்தன அரசனின் இதழ்கள்.

''நடந்து முடிந்த பிறகு நீ என்ன செய்ய முடியும், அரசே? உன் கண்ணெதிரில் வேலும் வாளுமே தெரிகின்றன. ஓங்குயர்ந்து வளர்ந்து நிற்கும் தமிழனின் பண்பாட்டு நெறி தெரியவில்லை. வெற்றிதான் உனக்குத் தெரிகின்றது. வெற்றிக்குப் பின்னணியில் நிற்கும் வீறுதமிழ் வழிமுறைமை உனக்குப் புரியவில்லை. என்ன செய்வது மன்னா? நீ அப்படி ஆகிவிட்டாய்?''

''வெண்ணிக்குயத்தியார் அவர்களே! விலாப் புண்ணிலே வெந்தணற் கட்டையை நுழைப்பதுபோல் வேதனைப்படுத்தாதீர்கள். விரைந்து கூறுங்கள். மாண்புடைய தமிழர் பண்பாட்டுக்கு என்னால் என்ன மாசு நேர்ந்து விட்டது? விளக்கமாகச் சொல்ல மாட்டீர்களா?''

''மறவர்குலக் கோமானே! நிறைவு பெற்றதாக இல்லை உன் வீரம்; ஆமாம், அரசே! அழியாத பழி உண்டாக்கிக் கொண்டவன் நீ! வெட்ட வெளிச்சமாகச் சொல்கிறேன்; நீ தமிழரின் வீரப் பண்பாட்டுக்குத் தீராத

களங்கத்தைச் சேர்த்து விட்டாய். இனி அப்பழியை அழிக்கவோ, குலைக்கவோ இயலாது.''

''என்ன பேசுகிறீர்கள்? நான் வீரம் தவறினேனா? நான் கோழையானேனா? இதை நம்ப முடியவில்லையே என்னால்? எதை ஆதாரமாக்கி இப்பழியைச் சுமத்துகிறீர்கள்? கடல்போல் வந்த பகைவரைக் கண்டந் துண்டமாக்கிக் கழுகுகளுக்கு விருந்து வைத்தேனே, அதிலே பழி ஏற்பட்டதா? அல்லது அண்மையில் நிகழ்ந்த வெண்ணிப் பறந்தலைப் போரில், ஆரவாரமிட்டு வந்த **சேரமான் பெருஞ்சேரலாத**னின் படையைச் சூறைக் காற்றுப் பஞ்சாகச் சுழல விட்டேனே, அதிலே களங்கம் ஏற்பட்டதா? விற்கொடியை வீழ்த்தி, விண்முட்டப் புலிக் கொடியைப் பொலிவோடு பறக்க விட்டேனே, அதிலே மாசு ஏற்பட்டதா?''

''போதும் மன்னா! நீ தொடுத்த போரைப் பற்றியும் சேரமானை வீழ்த்தியது பற்றியும் நான் அறியேனா?''

''பின் என்ன கூற வருகிறீர்கள்?''

''நீ பெற்றது வெற்றியன்று என்கிறேன் நான்.

நீங்காத பெரும் பழியைத்தான் வெண்ணிப்பறந் தலையில் நீ அறுவடை செய்திருக்கிறாய்!''

''எப்படி இதைக் கூறுகிறீர்கள்?''

''உருத் தெரியாத காற்றால் ஓடும் நாவாய் செலுத்தி, ஒப்பற்ற வெற்றி ஈட்டிய சோழ மரபில் வந்தவனா நீ? ஐயோ! உனக்குத் தமிழரின் வீர மரபு தெரியாமற் போய் விட்டதே! வெண்ணியில் வெற்றி உன்னைத் தழுவிக் கொண்டது என்கிறாய். ஆனால் உண்மையில் வெற்றிச் சிகரத்தை எட்டிப் பிடித்தவன், வேந்தன் சேரமான்தான்! நீ யல்லன்!''

''எங்ஙனம் ?''

''போர் மரபு தெரியாதா உனக்கு?'' தெள்ளு தமிழர் கூறும் புறப்பொருள் இலக்கணம் என்ன கூறுகிறது? பாய்கின்ற ஈட்டி மார்பில் பாய வேண்டும். கொல்கின்ற எதிரியை எதிரிலேயே நின்று தாக்கிக் கொல்ல வேண்டும். புறமுதுகிலே புண்ணை ஏற்படுத்தி எதிரியை அழிப்பவன், சிறகொடிந்த புறாவைச் சிதைத் தொழிக்கும் தீய வல்லூறைப் போன்றவன். நீ அப்படித்தான் வாடாத களங்கத்தை வாரி அணைத்துக் கொண்டாய்!''

''ஐயோ! என்ன கூறுகிறீர்கள்?''

''ஆமாம், கரிகாலா! நீ வெண்ணியில் நடந்த வெம்போரில் வீசிய ஈட்டியால் புறப் புண்ணைத்தான் சேரமானுக்கு ஏற்படுத்தினாய்! நீ மார்பிலே பாய்ச்சிய ஈட்டி ஊடுருவிச் சென்று அவன் முதுகின் வழியாகத் துளைத்துச் சென்றுவிட்டது. புறமுதுகிலே புண்ணேற்பதை இம்மியேனும் பொறுத்துக் கொள்வார்களா, பொற்றமிழ் மறவர்கள்? வேந்தருக்கு வேந்தன் என்று சொல்லப்படும் கரிகாலனே இந்த வெட்கங்கெட்ட செயலைச் செய்தானே என்று, இறப்பின் முகட்டிலும் வேதனைப்பட்டான் சேரமான். தமிழர் மரபிற்கு நீ இழைத்த தீராத களங்கத்தைப்போக்கிக் கொள்ள அவன் கழுவாய் தேட முனைந்தான்.''

''என்ன செய்தான்?''

''வேலும் வாளும் ஏந்திய வீரத் தமிழர் விழுப்புண்ணைத் தருவார்கள்; பெறுவார்கள். வெண்ணியில் நடந்த போரில், தமிழரின் வீரப் பண்பாட்டுக்குத் தீராத களங்கம் ஏற்பட்டு விட்டது. ஆகவே சேரமான் நீ செய்த இந்த வெட்கங்கெட்ட செயலுக்கு நாணி, வடக்கே இருந்து உயிர் துறந்தான்.

அக்காட்சியைக் கண்டு அவலம் கொண்ட சான்றோர் பலர் தாமும் வடக்கிருந்து அவனுடன் உயிர் துறந்தனர். மன்னவனே! இப்போது புரிகிறதா? வெண்ணிப் பறந்தலைப் போரில் உண்மையில் வெற்றியைப் பெற்றவர் யார் என்று ஒப்புக் கொள்கிறாயா? இனி என் வேலை முடிந்தது. நான் வருகிறேன்'' இப்படிக் கூறி வெண்ணிக் குயத்தியார் அவையை விட்டு வெளியேறினார்கள்.

வீரமரபில் தோன்றிய சேரமானின் விந்தைச் செயலைக் கேட்டு, கரிகாலனின் கலங்காத விழிகளில் வெங்கடல் ததும்பி நின்றது.

**'நளியிரு முந்நீர் நாவா யோட்டி,**
**வளிதொழி லாண்ட வுரவோன் மருக!**
**களியியல் யானைக் கரிகால் வளவ!**
**சென்றமர்க் கடந்தநின் னாற்றல் தோன்ற**
**வென்றோய் நின்னினு நல்ல னன்றே -**
**கலிகொள் யாணர் வெண்ணிப் பறந்தலை,**
**மிகப்புக முலக மெய்திப்**
**புறப்புண் நாணி வடக்கிருந் தோனே!'**

**– புறநானூறு.**






**காதல் !**

கன்னித் தமிழகம் இந்தக் கனிந்த சொல்லுக்கு இப்படித்தான் இலக்கணம் இருக்க வேண்டுமென்று தனி இலக்கியமே படைத்துக் காட்டியுள்ளது.

முகிலும் முகிலும் சந்திக்கும் போது ஒளி மின்னல் கொடி போடுகிறது.

அகிலும் கல்லும் இணையும் போது அரிய நறுமணம் கமழ்ந்து எழுகிறது.

இழையும் இழையும் எதிர்ப்படும் போது எழிலார்ந்த ஆடை உருவாகிறது.

நெஞ்சும் நெஞ்சும் இணைந்திடும்போது இனிய காதல் முகிழ்க்கிறது.

தூய காதல் அறுபடாத அன்புக் கயிற்றால் பின்னிப் பிணைக்கப்படுகிறது.

ஒருவர் நெஞ்சுள் ஒருவர் நுழைகிறார்கள்; பின்னர் உடலைவிட்டு உயிர் நீங்கினாலும், உருவமற்ற காதல் உணர்வு சாவதேயில்லை.

காதல் உணர்வில் மூழ்கியவர்கள் அதற்குப் பிறகு தனக்காக வாழ்வதில்லை. அவனுக்காக அவளும், அவளுக்காக அவனுமே வாழ்கிறார்கள்.

காதலியின் காலில் முள்பட்டால், தன் விழியில் வேல் பட்டதாகத் துடிக்கிறான் காதலன். காதலன் சற்று வேளை தவறிச் சாப்பிட்டால், தன் உயிரே போய்விட்டது போல் எண்ணி உருகுகிறாள் காதலி!

காதற்களத்திலே தன்னலம் பறந்து விடுகிறது. இன்பத்தேனை இருவருமே அள்ளிச் சுவைக்கிறார்கள் என்றாலும், அவனுக்காகவே தான் இருப்பதாகக் கருதுகிறாள் மங்கை; அதேபோல் காதலியின் இன்பத்திற்காகவே தான் இருப்பதாக நினைக்கிறான் காளை. இதுதான் ஈடு எடுப்பற்ற தமிழ்க் காதல்.

'சயாமிய இரட்டைக் குழந்தைகள்' ஒட்டிக் கொண்டே பிறந்து, ஒருங்கே வாழ்ந்து, ஒரே நேரத்தில் இறந்தனவாம்! ஆனால் அந்தச் சயாமியரும் சச்சரவு காரணமாகவே மடிந்ததாக வரலாறு கூறுகிறது.

தமிழ்க்காதலர் தனித்தனியே பிறக்கிறார்கள். உருவங்கள் இரண்டாக இருந்தாலும் உள்ளங்கள் ஒன்றாகி விடுவதால், ஒருவரை எறும்பு கடித்தாலும் மற்றவருக்கு வலிக்கிறது. ஒருவர் மாண்டவுடன், மற்றவரின் உயிரும் இந்த மண்ணின் மீது நிலைத்து நிற்பதில்லை. பாண்டியன் நெடுஞ்செழியன் மடிந்தவுடன், பார்போற்றும் கோப்பெருந்தேவி அடுத்த நொடியே உயிர்துறந்த காட்சி எத்தனையோ சான்றுகளில் ஒன்று.

ஆகவேதான் தன்னலமற்ற தூயகாதல் நெறியை, மனிதகுலத்திலே மட்டுமின்றி, ஏனைய விலங்குகளிடமும் ஏற்றிக் கூறியவர்கள் தமிழ்க் கவிஞர்கள்!

அது கொடிய வேனிற்காலம்.

சுடும் கதிரவனின் கொடிய வெங்கதிர்களால் காடும் கழனியும் வாடி வதங்கிக் காணப்பட்டன.

இருக்கின்ற ஏரி குளங்களே வற்றும்போது, அந்தப் பாலை நிலத்துப் பகுதியிலா நீர் தென்படும்?

எங்கு நோக்கினும் பொட்டல் வெளி தென்பட்டதே தவிர, தாகம் போக்கிக் கொள்ள தண்ணீர் காணப்பட வில்லை.

ஆண் பெண் இணையான அந்த இரு கான் மான்கள் நீர் தேடிப் புறப்பட்டன.

அன்பு வெள்ளத்திலே மூழ்கி, நெஞ்சத் தாகத்தைப் போக்கிக் கொண்டன அந்த இணை மான்கள்; ஆனால் தொண்டைத் தாகத்தைப் போக்கிக்கொள்ள துளியும் நீர் கிட்டவில்லை அவற்றிற்கு!

அலைந்தன... அலைந்தன...அலைந்தன...

இறுதியில் சுனை வாயிலொன்றில் சின்னஞ்சிறு குட்டையொன்று தென்பட்டது. கண்டமான்கள் களிப்பால் துள்ளின.

தடிக்குத் தப்பி ஓடும் பாம்பொன்றுக்குத் தக்க வளை கிடைத்தால், அதற்கு ஏற்படும் மகிழ்ச்சி

மான்களுக்கும் ஏற்பட்டது. அலைந்த களைப்பு அரை நொடியில் பறந்து விட்டது. இரண்டும் ஒன்றை யொன்று வெற்றிக்களிப்போடு பார்த்துக் கொண்டன; குட்டையருகே நெருங்கின; அந்தக் குட்டையின் நீரோ சிறிய அளவில், இன்னும் சற்று நேரத்தில் வற்றிவிடும் நிலையில் இருந்தது.

ஆம். ஒரு மானின் தாகத்தைப் போக்கும் அளவிற்குத்தான் அங்கே கையளவு நீர் காணப்பட்டது.

இன்னும் தாமதித்தால் எரிகின்ற பகலவன், தன் கதிர்க்கைகளால் இருக்கும் நீரையும் சுருட்டிக் கொண்டு போய்விடுவான் என்று அவை பதறின.

சுனைவாய் நீரோ ஒன்றின் தாகத்தைத்தான் போக்க முடியும்; இணையான மான்களுள் இப்போது யார் பருகுவது என்ற போட்டி தொடங்கியது.

கணவன்தான் பருகவேண்டும் என்று கன்னிமான் நினைத்தது! கனிவான மனைவிதான் குடிக்க வேண்டு மென்று கலைமான் நெஞ்சார எண்ணியது!

''தாமதிக்காமல் சென்று தண்ணீரைப் பருகி வா!'' என்று ஆண்மான் தன் துணைக்குப் பரிவோடு கூறியது.

பெண்மான் அசையவில்லை.

''தாங்கள்தான் சென்று பருகவேண்டும்; எனக்குத் தாகம் மிகுதியில்லை'' இப்படிப் பதில் கூறியது பிணைமான்.

உற்ற கொடிய தாகத்தைத் தன் காதலனுக்காக ஒளிக்கும் பிணைமானின் பெருந்தன்மையைக்கண்டு, உயர்ந்த கொம்புகளையுடைய கலைமான் உள்ளன்போடு சிரித்தது.

''உண்மை; உண்மை. நீ மட்டும் தனியாகச் சென்று நீர் அருந்திப் பழக்கமில்லையல்லவா? வா! இருவரும் சேர்ந்தே பருகுவோம்'' என்றழைத்தது ஆண் மான்.

அந்தச் சின்னஞ்சிறு நீர்நிலையில், சுருங்கிய அளவில் இருந்த நீர் எப்படி இரண்டு மான்களின் தாகத்தைப் போக்க முடியும்? இரண்டும் சேர்ந்து பருகினால், தொண்டையைக்கூட எட்டிப் பிடிக்குமா அந்த நீர்?

ஆண்மான் அன்புக்குரிய தன் காதல் துணைக்குத் தன் தாகத்தையும் தியாகம் செய்யத் துணிந்தது. ஆனால் பெண்மானோ அதை ஒப்புக் கொள்ளவில்லை.

பின் எப்படி ஆண்மான் தான் நினைத்ததை நிலைநாட்ட முடியும்? அதற்கும் ஒரு வழி கண்டது அது.

இரண்டும் நீர்நிலையில் இறங்கி, தம் அழகிய வாயை வைத்து நீரை உறிஞ்சிக் குடிக்க முனைந்தன. ஆண்மானோ நீர் மட்டத்தில் வாயை வைத்ததே தவிர, நீரைக் .குடிக்காமல் குடிப்பது போல பாசாங்கு காட்டி நடித்தது. ஆண்மானும் சேர்ந்தே நீரைக் குடிப்பதாக எண்ணி அன்புக்குரிய பெண்மான் நீரை உறிஞ்சிக் குடித்தது.

ஏற்பட்ட நீர்த்தாகம் பெண்மானுக்குத் தணிந்தது.

காதல்தாகம் தணிக்கும் கன்னிமானுக்குத் துணைபுரிந்த தியாக உணர்வால், தன் அளப்பரிய அன்புத் தாகத்தைத் தணித்துக் கொண்டது ஆண்மான்.

**ஒருவர் மற்றவர்க்கு விட்டுக் கொடுத்தால்தான், உயரிய காதல் வாழ்வு ஓங்கி மிளிர முடியும் என்பது தமிழர் பண்பு.** உலகின் பல பகுதிகளில் ஒருவர் மற்றவரின் தசையைத் தின்று, குருதியைக் குடித்து வெறியாட்டம் ஆடிய நாட்களில், விலங்கிடமும் தன்னலமற்ற காதற் பண்பை ஓவியமாக்கிக் காட்டிய பெருமை தமிழ்க் கவிஞருக்கே இருந்தது. அதுவும் இந்தப் பாடல் இன்றைக்கு ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முன் தோன்றியது என எண்ணும் போது, நம் உடலின் ஒவ்வொரு அணுக்களும் பூரித்துச் சிலிர்க்கின்றன.

**'சுனைவாய்ச் சிறுநீரை எய்தாதென் றெண்ணிப்**
**பிணைமா னினிதுண்ண வேண்டிக் – கலைமாத்தன்**
**கள்ளத்தின் ஊச்சுஞ் சுரமென்பர் காதலர்**
**உள்ளம் படர்ந்த நெறி.'**

**– ஐந்திணை ஐம்பது.**



# பிறர் நெஞ்சும் பேதையும்



**பூவிரித்த காவிரி பொங்கியோடியது.**

புனலாடித் திரும்புவதற்குப் புறப்பட்டாள் அந்தப் பூவை.

அனலேறிப் பழுத்த இரும்பை மிஞ்சும் அந்த ஆரணங்கின் சிவந்த அடிகள், புல்லின் நுனிகளில் பட்டு மேலும் மேலும் சிவந்தன.

அன்னம்போல் நடந்தாள் அவள்.

தன்னந்தனியே அவள் நடந்தாலும், பொன்னிகர்த்த கணவனுக்குரிய அறுசுவை உணவைத் திரும்பி வந்து சமைக்க என்னென்னவோ திட்டங்களை அவள் இதயம் எண்ணிக் கொண்டே சென்றது.

கடமை வீரனான கதிரவன் கொடுமை நிறைந்த தன் கதிர்களை உலகத்து உயிர்களின் உடலங்களின்மேல் பாய்ச்சி, கொதிப்பேற்றிக் கொண்டிருந்தான்.

மரத்தில் தொங்கும் மாங்கனியின்மேல் காலைப்பனி துளித்துளியாகத் தேங்கி நிற்பதைப்போல், அவள் நெற்றியிலும் கன்னத்திலும் வியர்வை முத்துக்கள் அரும்பி நின்றன.

சேலை முந்தானையை எடுத்துத் தன் சந்தன முகத்தைத் துடைத்துக் கொண்டாள் அவள்.

''குதித்தோடும் குளிர்ந்த காவிரி மங்கையே! கொதிப்பேற்றும் கதிரவனுக்கு நீதான் குறைவுபடாத எதிரியாக விளங்குகிறாய். அவன் தன் கரங்களால் உடலை எரித்து எரிச்சலை ஊட்டுகிறான்; நீயோ உன் சுழற் கைகளால் எங்களை வாரியணைத்துக் குளிர்முத்தம் தந்து, உடலின் ஒவ்வொரு அணுவுக்கும் புது மகிழ்ச்சி சேர்க்கிறாய்; பெண்ணினத்தின் மென்மைக்கு நீதான் பெருமைமிக்க எடுத்துக் காட்டாக மிளிர்கிறாய்! வாழ்க நீ!'' இப்படி அவள் செவ்விதழ்கள் முணுமுணுத்தன.

துறையை நெருங்கிவிட்டாள் அந்தத் தூயதமிழ்ப் பாவை.

நுரை என்ற திருமுடியைச் சீதனமாகக் கொண்டு விரைந்தோடும் காவிரித்தாய், அந்தப் பிறை நுதற் பெண்ணை 'வருக, வருக' என்று வரவேற்றாள்.

மூழ்கி மூழ்கிக் குளித்தாள் அவள். அழகுத் தாமரை ஒன்று, தடாக நீரிலே ஆடுவது போல இருந்தது அந்தக் காட்சி.

பொன்னைவிட மின்னும் அவள் மேனி பொன்னி ஆற்றுள் மூழ்கி எழுந்தபோது, மழைநீர் கண்ட கெண்டை மீன் ஒன்று துள்ளி எழுந்து விழுதல் போல் இருந்தது.

நெடுநேரம் அவள் நீரில் செலவிட விரும்ப வில்லை. கணவனுக்கு இனிய அடிசில் சமைத்தாக வேண்டுமே! அந்தக் காரிகை உடன் புறப்பட்டாள்.

நெஞ்சாதனத்திலே கொலுவிருக்கும் நேரிய கணவன், அவள் பஞ்சனைய கையளிக்கும் சமையலை உண்டு, 'மேலும் அதைக் கொஞ்சம் வை' என்று சொல்வதில் தானே, இல்லறப் பெண்டிரின் இன்ப உலகமே இருக்கிறது!

அவள் கால்கள் விரைந்தன. அவள் கற்பனை என்னென்ன வகைகளை இன்று சமைக்கப் போகிறோம் என்று பறந்து கொண்டிருந்தது.

நனைந்த உடையைப் புனைந்து, நடந்து சென்ற அந்த மாது குனிந்த தலையையும் நிமிர்த்தவில்லை.

எங்கிருந்தோ அந்தவழி வந்த பொலிக்காளை போன்ற அந்த இளைஞன், செதுக்காத அந்தப் பொற்சிலையைப் பார்த்து விட்டான்.

உலகத்தின் அழகையெல்லாம் ஒன்று திரட்டி, நிலம் பார்த்தே நடந்துவரும் அந்த நேரிழையைக் கண்ட அவன் நெஞ்சம், சலனப் பொய்கையிலே வீழ்ந்தது.

எட்டாத உயரத்திலே எழிலோடு பழுத்திருக்கும் இனிய மாங்கனியைக் காணும் அணில், நிமிர்ந்து நிமிர்ந்து பார்த்து நெடுமூச்செறிவதில்லையா?

அப்படித்தான் அந்த வாலிபனும் அந்த அழகோவியத்தைக் கண்டு பெருமூச்செறிந்தான்.

'ஐயோ! இவளைப் போன்ற பேரழகி எனக்கு இல்லறத் துணையாக வாய்த்தால், இன்பத் தடாகத்திலே

வாழ்நாளெல்லாம் குளித்திருப்பேனே!' என்று எழுந்த அவன் இதய வேட்கை வாய்விட்டு வெளிவந்துவிட்டது.

மலர்களெல்லாம் ரோசாவாகி விடுவதில்லை!

வானத்தில் பூப்பதெல்லாம் நிலவாகி விடுவதில்லை!

வையகத்தில் சேலை கட்டியவரெல்லாம் பேரழகிகளாகி விடுவதில்லை.

இட்ட அடியோடு ஒரு விழியை நட்டு, எடுக்கும் அடியோடு ஒரு விழியை ஈர்த்து, காண்போரைத் திணறடிக்கும் காந்தச் சக்தி, சில பெண்களிடம் மட்டுமே அமைகின்றது.

இவள் அவர்களுக்கெல்லாம் பேரரசி.

கண்ட கட்டிளங்காளை, அந்தச் செண்பக மலரின் அழகையெல்லாம் அள்ளியள்ளித் தன் கண்களாலேயே உண்டான்.

ஆனால் அந்த மங்கையர்க்கரசியோ, மண்ணிலே கண்ணைப் பதிய வைத்து மான்போல் விரைந்து நடந்தாள்.

போதையேறிய காளையோ வாய்விட்டு மெல்ல உளறினான்: ''இவளல்லவா பேரழகி? இல்லத் துணையாகப் பெற வேண்டுமானால், இவள் போன்றவள் அல்லவா எனக்கு வாய்க்க வேண்டும்? இழைத்தெடுத்த சந்தனச் சிலைக்கு முகிலாடை அணிவித்தது போலல்லவா இவள் தோற்றம் காட்சி தருகிறது? ஐயோ! இவள் என் கைக்குக் கிட்ட மாட்டாளா? நான் காலமெல்லாம் இவளை எடுத்தணைத்துத் துய்க்க மாட்டேனா?'' இப்படி எழுந்த ஏக்கம் மண்டிய அவன் குரல், அவள் செவிகளில் எரிதழலாகச் சென்று பாய்ந்தது.

நெருப்பை மிதித்தவள்போல், அந்த நேரிழை அவ்விடத்தை விட்டுத் துடித்துக் கொண்டு ஓடினாள்.

''கொண்டவன் நெஞ்சிலே மட்டுமே குடியிருக்க வேண்டிய கோதையின் உரு, கண்டவன் நெஞ்சிலே சென்று புகுவது தண்டமிழ் மரபுக்கு ஒத்து வருமா? கொண்டையிலே ஏறுகின்ற மலர்கூட, ஒரே தலையில் அமர்ந்து கோலாகல வாழ்வுடன் மறைகிறது; ஐயய்யோ! என் உருவம் அவன் நெஞ்சிலே புகுந்து விட்டதே! கணவனின் நெஞ்சமன்றி, மற்றொருவன் உள்ளத்திலே சென்று புகுவது கற்புடைய காரிகையர்க்கு அழகாகுமா?

மழைத்துளி சேற்றிலே விழும் வரைக்கும் தூய்மையுடையதாக இருக்கிறது; மங்கையோ தன் உருவம் மாற்றானின் நெஞ்சிலே விழுகின்ற நேரம் வரையே தூய்மையுடையவளாக இருக்கிறாள்!

தொட்டால் சுருங்குவது இலையாக இருக்கலாம்!

மோப்பக் குழைவது அனிச்ச மலராக இருக்கலாம்!

பிற ஆடவன் நெஞ்சிலே சென்று என் உரு பட்டாலே, என் கற்பு அழிந்ததாக நான் கருதுகிறேன்.

அது நடந்து விட்டது. எந்தக் கணவனின் இதயத் திரையில் மட்டுமே என்உரு நிழல் ஆட வேண்டுமோ, அதையும் மீறி அயலாரின் விழியரங்கிலே புகுந்து அவன் உள்ளத் திரையிலேயும் அது பட்டுவிட்டது. அதனால் என் கற்பு கெட்டுவிட்டது.

எனவே, இனி நான் என் கணவனுக்குரிய கற்பு மனைவியல்லள்! அவன் வீட்டுக் குல விளக்காக மிளிர்வதற்கு, எனக்கு இனித் தகுதியே இல்லை. மொத்தத்தில் இந்த உலகிலே வாழவே கூடாதவள் நான்!''

அந்தக் கற்புச் செல்வி இப்படிக் கூறிக்கொண்டே தன்னைத்தானே மாய்த்துக் கொள்ளப் பூதச்சதுக்கம் இருந்த திக்கை நோக்கி ஓடினாள்.

கண்ணாடி ஆடையிலே உடல் அழகு காட்டிக் கண்ணாளர்களை மாற்றிக் கொண்டே இருந்த 'கிளியோபாத்ராக்கள்' வாழ்ந்த காலத்திலேதான், தமிழகம் மேற்கண்ட வியத்தகு காட்சியைக் காட்டிக் கொண்டிருந்தது.

காணும் உலகச் சான்றோர், விழிஇமை உயர நம்மைப் பார்த்துப்பார்த்து வியக்கிறார்கள்.

**'மண்டினி ஞாலத்து மழைவளந் தரூஉம்**
**பெண்டிராயின் பிறர் நெஞ்சு புகாஅர்'**

**– மணிமேகலை.**



# கொடிக்குக் கொடுத்த கொடை



வயலிலே பயிர் வாடும்போது, வானக் கருமேகம் மனம் உருகிக் கண்ணீர் விடுகிறது. முகிலின் அழுகை மழையாகும்போது, வாடும் பயிரோ கதிர்வாய் திறந்து வரவேற்றுச் சிரிக்கிறது.

அயராப் பசிகொண்ட நீர்ப்பாம்பின் வாயிலே சிக்குண்ட தவளை துயருடன் குரல் கொடுக்கின்றது. அண்டையிலே செல்பவர், அலறுகின்ற தவளைக்கு அபயம் தர கல்லெடுத்துப் பாம்பின் மேல் எறிகிறார்கள்; பாம்பு பிடியைத் தளர்த்துகிறது; தவளை தப்புகிறது; காலத்தால் எறியப்பட்ட கல், தவளைக்கு உயிரையே மீட்டுத் தருகிறது.

சூறைக் காற்றிலே சிக்கித் தூக்கி எறியப்பட்ட சிற்றெறும்பு ஒன்று, வீறுடன் ஓடும் வெள்ளத்திலே

அடித்துவரும் துரும்பு அதற்குப் பற்றுக் கோடா கிறது; எளிய துரும்பு எறும்புக்கு உயிரையே காக்கும் ஒப்பற்ற காவலனாக மாறுகிறது!

காலத்தால் செய்யப்படும் சிறு உதவிகள் ஞாலத்தை விடப் பெரியதென்றார் வள்ளுவர்.

அது யாருக்கு?

அந்தச் சின்னஞ்சிறு உதவியால் பெரும்பயன் பெறுவோர், தங்களின் நெஞ்சத்திலே தாம்பெற்ற உதவியின் அருமையை ஓவியமாக்கி வைத்துக் கொள்வதில்லையா?

'உன்னிடம் இருசட்டைகள் இருந்தால், ஒன்றைக் குளிரால் வாடும் ஏழைக்குக் கொடு; அதுதான் பொது வுடைமை', என்றான் காரல் மார்க்சு.

எதிரே இருப்பவன் ஆறாப் பசியோடு நம்மை நோக்க, இருக்கின்ற இருகனிகளையும் தானே உண்பதில் எள்ளளவும் மகிழ்ச்சியில்லை.

ஒரு கனியைப் பசியால் துன்புறுவோனுக்குத் தந்து, அவன் உண்பதைப் பார்த்து மகிழ்வதிலேதான் உண்மையான பூரிப்பு ஒளிந்துள்ளது.

'**கொடை**' என்ற சொல்லுக்கே நெடிய இலக்கணம் வகுத்துக் கொண்ட மரபு தமிழ்மரபு.

கொடிபறக்கும் கோட்டையெலாம் கொடை மணமும் கமழ்ந்து கிடந்தது. '**படைமடம்**' படுவது பாரில்கொடிய கீழ்மை என்ற திடமான கொள்கை கொண்ட தமிழ் வேந்தர்கள், '**கொடைமடம்**' படுவதிலே மட்டும் கொஞ்சமும் பின்வாங்கவில்லை.

கண்மூடித்தனமாக அள்ளிக் கொடுப்பதுதான் கொடைமடம் என்ற சொல்லுக்கே பதவுரையாக இருந்தது.

கோதையின் கூந்தலிலே மணக்கும் மலர்ச்செண்டு செடி தந்த கொடையல்லவா?

தீப்பசி போக்கி, வயிற்றைக் குளிரவைக்கும் சோற்றுக் கவளம் செழுமை நிறைந்த மண்ணன்னை கொடுத்த கொடையல்லவா?

அள்ளிக் கொடுப்பதால் சிவந்துவிடும் கைகளை, ஆயிரமாயிரம் பாடல்களால் பாடினர் தமிழ்க்கவிஞர்கள்.

தமிழ் மன்னர்களோ தம் கை சிவந்து ஓயும்வரை, நாடிவந்தவர்க்குத் தருவதிலேதான் இன்ப மகிழ்ச்சியே இருக்கிறதென்ற தளராத நம்பிக்கையிலே வாழ்ந்தார்கள்.

ஈராயிரம் ஆண்டுகட்கு முன்னால், எது கிடைத் தாலும் அடித்து உண்ணும் காட்டுமிராண்டித்தனமான வாழ்க்கைப் போராட்டத்திலே உலகம் வீழ்ந்து கிடந்த நேரத்தில்தான் அந்த மன்னன் வாழ்ந்தான்.

மாரிபோல் உள்ளம் கொண்ட அவனுக்குப் **'பாரி'** என்று பெயர் சூட்டி மகிழ்ந்தது தமிழ்வரலாறு!

பறம்பு மலைப்பகுதிக்கு அவன்தான் அரசன்!

அன்று அவன் அரசவைக் கடமைகளையெல்லாம் முடித்துவிட்டு, மாலைநேரத்தில் பொழுதைக் கழிக்க நகருலா புறப்பட்டான்.

தனிமையோடு இயற்கையின் சிரிப்பிலே மூழ்க வேண்டும் என்று கருதிய பாரிமன்னன், தான் ஒருவனே

தேரிலே ஏறிக்கொண்டு, தானே அதைச் செலுத்திக் கொண்டு புறப்பட்டான்.

அவன் நெஞ்சம் பறம்பு நாட்டின் வளத்தை மேலும் மேம்படுத்தும் வழிமுறைகளிலேயே சுழன்று கொண்டிருந்தது.

தேரைச் செலுத்திக்கொண்டிருந்த மன்னனின் விழி களோ, நாற்புறமும் சுழன்று இயற்கையன்னையின் கோலப் படைப்புகளை நுகர்ந்து கொண்டிருந்தன.

**மலையையும், மலையின் மேலாடையான அருவியையும், அருவியின் மகளான ஆற்றையும், ஆற்றின் செம்மாந்த நடையால் அகமகிழ்ந்து நிற்கும் பயிரையும், பயிரின் செழுமை கண்டு பூரித்துச் சிரிக்கும் குடிமக்களையும் அவன் கண்கள் பார்த்துப் பூரித்துக்கொண்டே வந்தன.**

அந்தக் குறிப்பிட்ட இடத்திற்கு வந்ததும் அவனுடைய ஆழ்ந்த விழிகள் கவலையோடு நோக்கின.

கடிவாளம் பிடித்திருந்த அவன் கைகள் தேரை நிறுத்தின.

இப்போது அவன் முகத்திலே எல்லையற்ற கவலைக் கோடுகள் அல்லிக்கொண்டன.

'என் வளநாட்டிலே இப்படியொரு காட்சியா?' என்ற கேள்வியைக் கேட்டுக் கொண்டே தேரைவிட்டு இறங்கி வந்தான் பாரி.

அப்படி அவன் நெஞ்சை ஆட்டிப்படைத்த காட்சி எது?

அங்கே அழகான முல்லைக் கொடி ஒன்று, பற்றிப்படரக் கொழுகொம்பின்றி காற்றிலே ஆடிக்கொண்டு இருந்தது.

ஆம். கொடியென்றால் படர்வதற்குரிய கொழு கொம்பு ஒன்று வேண்டாமா?

பருவ வயது தாண்டியும், உரிய கணவனைப் பெற முடியாத பரிதாபத்துக்குரிய பெண்ணைப்போல், ஆடிய அந்த முல்லைக்கொடி அவன் இரக்கத்தை ஈர்த்தது!

மண்ணிலே பிறந்து, ஏனோ விண்ணை நோக்கித் தவம் புரியும் அந்த முல்லைக்கொடி, அடித்த காற்றுக்கு ஈடு கொடுக்க முடியாமல் வீழ்ந்து எழுந்து துவண்டு நின்றது.

மலர்போன்ற மென்மை நெஞ்சம் படைத்த மன்னவன் பாரிக்கோ, இந்தக் காட்சி மாபெரும் கவலையைத் தந்தது.

ஆதரவற்ற உயிர் ஒன்று அலைக்கழிக்கப்படுவதை அவன் ஈர உள்ளத்தால் தாங்க முடியவில்லை.

மன்னன் சுற்றுமுற்றும் பார்த்தான். உரிய கொழுகொம்பைத் தேடிக் கொண்டுவந்து, அக்கொடி படர நடவேண்டுமென்று எண்ணினான். ஆனால் அவ்விடத்தில் பச்சைக் கொடிகளும் படர்ந்த செடிகளும் இருந்தனவே தவிர, உலர்ந்த கொம்பொன்றும் தட்டுப்படவில்லை.

உடனே மன்னன் திரும்பிப் பார்த்தான். ஒப்பற்ற ஓவிய அழகுடன் செதுக்கிவைத்த தன் தேர் நின்று கொண்டிருப்பது அவன் நினைவுக்கு வந்தது.

நேரே தன் தேர் அருகில் சென்றான். குதிரையுடன் தேரை ஓட்டிக் கொண்டு முல்லைக் கொடியருகே வந்தான்.

அழும் குழந்தையைத் தூக்கி அன்னையின் மடியிலே சேர்ப்பதுபோல் கொழு கொம்பின்றி அலமறும் அந்தக் கொடியை எடுத்துத் தன் தேர்மீது படர விட்டான் மன்னன்.

இப்போது முல்லைக்கு உரிய பற்றுக்கோடு ஒன்று கிடைத்து விட்டது.

ஏதோ இனந்தெரியாத மனப்பாரத்தை இறக்கி வைத்த மகிழ்வோடு பாரிமன்னன் நடந்தே அரண்மனைக்குப் புறப்பட்டான்.

தேரேறி வந்த அச்செங்கோல் வேந்தன் நடந்தே கோட்டைக்குச் சென்றான்.

வையகத்தின் எந்த மூலையிலேனும் இப்படியொரு விந்தைமிகு கொடை நிகழ்ச்சி நடந்திருக்க முடியுமா?

வயிற்றுப் பசியை நீக்க நிணவேட்கையுடன், வழியிலே காணும் எந்த உயிரையும் அடித்துப் பச்சை இரத்தம் வழிய வழிய உண்ட காட்டுமிராண்டிகள் உலகின்

பல பகுதிகளில் வாழ்ந்த அந்த நேரத்திலேதான் மேற்கண்ட பாரியும் வாழ்ந்திருக்கிறான்.

இந்த ஒரு செய்தி போதாதா நாம் நினைத்து நினைத்துப் பூரிப்பதற்கு!

**'சிறுவீ முல்லைக்குப் பெருந்தேர் நல்கிய**
**பிறங்கு வெள்ளருவி வீழும் சாரல்**
**பறம்பிற் கோமான் பாரி'**

**– சிறுபாணாற்றுப்படை.**



# அறிவும் திருவும்



அறிவை நிலவென்றால், திருவைக் கதிரவனுக்கு ஒப்பிட்டுக் காட்ட முடியும். நிலவு வான்வெளியில் உலா வரும் போது, கதிரவன் எங்கோ ஓய்வெடுத்துக் கொள்ளச் சென்று விடுகிறான். பகலவன் பவனி வரும் போது செம்மண் பாதையிலே மறைந்து கிடக்கும் செப்புக் காசைப்போல, நிலவோன் எங்கோ சுவடு தெரியாமல் மறைந்து கிடக்கிறான்.

வான்வெளியில் மட்டும் இந்த விந்தை நிறைந்த செயல்கள் நடை பெறுகிறதென்று எண்ணிவிடாதீர்கள்; வையகத்திலே வாழும் பல பெரிய மனிதர்களிடமும் அறிவும் திருவும் ஒரே நேரத்தில் சந்திப்பதில்லை. என்றோ சில நாட்களில் நீலத் திரைவானில் நிலவோனும் பகலவனும் ஒன்றாகத் தெரிவதைப்போல, சில அறிஞர்கள் இந்தக் கோட்பாட்டுக்கு மாறுபடுகிறார்கள்.

'இரு நகரக்கதை' எழுதி, இறவாப் புகழ்பெற்ற **'சார்லஸ் டிக்கன்ஸ்'** ஆங்கிலக் கதாசிரியர்களில் புகழ்ப் பூத்தவர். இறக்கும் தருவாயில் அவர் எழுதிய ஒவ்வொரு சொல்லுக்கும் மூன்று மூன்று பவுன் தருவதாக அவரை முற்றுகையிட்டார்கள் நூல் வெளியீட்டாளர்கள். ஆனால் அறிவாற்றலும் கற்பனைத் திறனும் ஒருங்கே படைத்த அந்தக் கலைஞர், தன் பிஞ்சுப் பருவத்தில் கால் வயிற்றுக் கஞ்சிக்காகப் படாதபாடு பட்டார். பத்தாவது வயதிலேயே பழக்கொத்துப் போன்றிருந்த அவர் குடும்பத்தின்மீது பொறாமைக்காரச் சமுதாயம் கல்லை வீசி எறிந்தது. சொந்தத் தந்தை துன்பத்தை வாரியணைத்துக் கொண்டு சிறை சென்றார். சுந்தரத்தாய் வீடு வீடாகச் சென்று தொழில்புரியும் வேலைக்காரியானாள். நாதியற்ற டிக்கன்ஸ் வீதிவீதியாக அலைந்தார். மருந்துக் கடையொன்றில், மணிக்கணக்கில் தங்கியிருந்து புட்டிகளின் மேல் 'சீட்டு'களை ஒட்டினார். தூங்குவதற்குக் கிடைக்கும் கொஞ்ச நேரத்தில், விழிகளை ஏய்த்துவிட்டு, கதைஎழுதத் தொடங்கினார். இருட்டு அறையில் நான்கு சுவர்களுக்கிடையில் அந்த ஏழை எழுதிய கதைகளை

விளம்பர உலகம் முதலில் பொருட்படுத்த வில்லை. ஓயவோ அன்றித் தலைசாயவோ இல்லை டிக்கன்ஸ்! அதன் பலன்...? அவர் எழுதிய 'கிரிஸ்மஸ் கரோல்' என்ற எழுத்தோவியம் எத்தனை ஆயிரம் பிரதிகள் விற்றதென்றே கணக்கிட முடியாமற் போய் விட்டது! **மதிக்க மறந்த இந்த உலகத்தை உழைப்பு என்னும் சாட்டை கொண்டு துதிக்கவே வைத்தார் டிக்கன்ஸ்.** அன்று வறுமையில் உழன்ற டிக்கன்ஸ்தான் இன்று வையகமே மறக்கமுடியாத நிலையைப் பெற்று விட்டார்.

என்றுமே இறவாத தத்துவங்களைத் தன் எழுது கோலால் படைத்துக் காட்டியவர் இத்தாலிய மாக்கவிஞர் **'தாந்தே'**. பிறக்கும் போதே அறிவுச் செல்வத்தை வாரிக் கொண்டு வந்த தாந்தே, இந்த நானிலத்தில் பொருட் செல்வத்தை மட்டும் பெறாமலே வாழ்ந்து மடிந்தார். மரக்கிளையைப் பற்றியிருந்த கையைவிட்டுவிட்ட பிறகு, ஆண்டவனை அழைக்கும் முட்டாளைப் போல, அந்த மாபெரும் கவிஞனை வகையறிந்து பாராட்டத் தவறியது இந்த வையகம். உணர்ச்சி நிறைந்த கருத்துகளின் ஊற்றான அந்த உடல், வறுமைப்

பிணியால் கொஞ்சம் கொஞ்சமாகக் கருகி மடிந்தது. ஈடு இணையற்ற அந்தக் கவிஞர் ஏழையாகவே மடிந்தார். இறுதிக் காலத்திலும் அவர் 'பிளாரன்சி'லிருந்து ஓடஓட விரட்டப்பட்டார்; இந்தப் பாழான உலகத்திலிருந்து ஓடிய அவர் ஒரு பாழடைந்த மாதா கோவிலைத் தஞ்சமடைந்தார். அங்கே அவர் எழுதிய 'திருக் காட்சி' என்ற எழுத்தோவியம் இலக்கியப் பூங்காவில் தங்கநிற ரோசாவாக மிளிர்கிறது. பாவம், டிக்கன்சிடம் வணிகனாக வேனும் நடந்துகொண்ட இந்த உலகம், தாந்தேயிடம் கொள்ளைக்காரனாகவே மாறிவிட்டது!

இலக்கியமென்னும் கத்தியை அத்தனைத் துறைகளிலும் கூர்பார்த்தவர் எழுத்துலக மேதை **'எச்.ஜி.வெல்ஸ்.'** ஏழமையைத் தோழமை பூண்ட குடும்பத்திலிருந்து வந்தவர். அவர் தந்தையோ தெருவிலே பானை விற்றுப் பிழைத்து வந்தார்; தாய் நாலைந்து வீடுகள் ஏறி, வேலை செய்து குடும்பத்தை நகர்த்தி வந்தாள். சின்னஞ்சிறு வயதிலேயே – ஏனையோர் அறிவுச் செல்வத்தைத் தேடி, கல்விச் சாலைக்குப் போய்க் கொண்டிருந்த நேரத்தில் –வெல்ஸ் ஏதேனும் வேலை

கிடைக்குமா? என்று தெருத்தெருவாக அலைந்தார். துணிக்கடையிலும், மருந்துக்கடையிலும் தங்கி இருந்து ஓயாப் பணிபுரிந்தார். சிறகு முளைக்காத பறவையை, தாய்ப்பறவையே இரைதேடி வருமாறு கூட்டிலிருந்து விரட்டினால்...? வெல்ஸ் தன்னுடைய அவல நிலைகண்டு நெஞ்சம் வெந்துபோனார். அந்த அரும்பு உள்ளம் தன்னுடைய அருமையான உயிரையே மாய்த்துக் கொள்ளத் துணிந்துவிட்டது. ஆனால் ஓர் ஆசிரியர் அவருக்கு ஆதரவு தந்தார். வெல்சின் வாழ்வுத்தொடர் திசை மாறியது. தொடக்கத்தில் ஐந்து ஆண்டுகள் வரை, தான் எழுதிய கதை, கட்டுரைகள் நன்கு அமையவில்லையே என்று கொளுத்திவிட்ட அதே வெல்ஸ்,பின்னர் தன் பேனாவால் மட்டும் இரண்டு இலட்சம் பவுன் சம்பாதித்தார். வறுமைப் பேய் அறிவை அழிக்க முனைந்தது; ஆனால் எப்படியோ அறிவு அதை வென்றேவிட்டது; எச்.ஜி. வெல்ஸ் இறவாத புகழ் பெற்றார்.

'சமுதாய ஒப்பந்தம்' எழுதி, பிரஞ்சு நாட்டுச் சரித்திரத்திலேயே சாகாத இடம் பெற்றவர் '**ரூசோ**'.

வாளெடுத்துப் போர்தொடுத்த பிறகே, ஒரு நாட்டின் வழிமுறைகளை மாற்றியமைக்க முடியும் என்பதைத் திருத்தி, பேனாமுனையாலேயே புரட்சியுலகம் காண முனைந்தவர் அந்த அறிவுலக மேதை. ஆனால் உலகம் போற்றும் அதே ரூசோதான் தொடக்க நாட்களில் ரொட்டிக்கும் வழியின்றி, பார்ப்போர் பரிதாபப்படுமாறு அலைந்து திரிந்தார்.

'ஐரோப்பாவின் வியாதி' என்று அழித்தெழுதாக் கறைபடிந்த 'துருக்கி'யின் தலைவிதியையே மாற்றி யமைத்து, அனைத்துலகும் மதிக்கச் செய்த **'முஸ்தபா கமால் பாஷா'** ஏழையர் மரபிலே வந்த ஏந்தல்தான்! அவர் தந்தை கடற்கரை அலுவலகத்தில் மிகக் குறைந்த சம்பளம் பெற்று வாழ்ந்த ஓர் ஏழைத்தொழிலாளி; அத்தொழிலாளியின் மகனான கமால் பாஷாதான் குவலயமே போற்றும் நிலைக்கு உயர்ந்தார்.

அடிமை விலங்கொடிக்க அரும்பாடுபட்ட **'ஆப்ரகாம் லிங்கன்'** ஜனாதிபதியாகவே பிறந்தவரல்லர்! இரவல் வாங்கி வந்த புத்தகங்களைப் படிப்பதற்குக்கூட

அடுப்பு வெளிச்சத்தைத் தேடிச் சென்றவர் அவர். விறகு வெட்டியின் தவப்புதல்வரான அவரால், எழுதிப் படிப்பதற்கு வேண்டிய கற்பலகைகளைக்கூட கனவிலும் நினைத்துப் பார்க்க முடியவில்லை. சுண்ணாம்புக் கட்டியால் மண்வெட்டியின் மீது எழுதியெழுதிப் பழகினார். ஆனால் அதே லிங்கன்தான் அகில உலகமும் போற்றும் பேரறிஞராகத் திகழ்ந்தார்.

பணம் படைத்த அமெரிக்க நாட்டின் ஜனாதிபதியாக இருந்தவர் '**ஐசன்ஹோவர்**'. உழைப்பை உடன் கொண்டு வந்த அவர், பணத்தோடு பிறக்க மறந்து விட்டார். 'கான்ஸாஸ்' நகரத்தில் நித்தம் நித்தம் பாத்திரம் கழுவியும், பசுமாடுகளை மேய்த்தும் வாழ்க்கையைத் தொடங்கிய அவர்தான், செல்வம் கொழிக்கும் ஒரு பெரிய வல்லரசின் முதல்நிலைத் தலைவராகத் திகழ்ந்தார்.

எவ்வளவோபேர் வளமும், வசதியும் பெற்று வாழ, எத்தனை எத்தனையோ அறிவியல் கருவிகளைக் கண்டு பிடித்துத் தந்தவர், விஞ்ஞான வித்தகர் '**தாமஸ் ஆல்வா எடிசன்**'. ஆனால் அவரோ இளவயதிலேயே பொருளீட்ட வேண்டிய அவசியத்தால், இரயிலில் சென்று

காய்கறிகளைக் கூவிக்கூவி விற்று வந்தார். இலாபத்தையும் நட்டத்தையும் கணக்குப்போட்டுப் பார்த்த அதே மூளை தான், நாகரிகத்தின் முன்னேற்றத்திற்கான பலப்பல அறிவியல் படைப்புகளையும் உலகுக்குக் கண்டு பிடித்துத் தந்தது.

புற்றுநோய்க்கே ஒரு முடிவு கட்டும் ரேடியத்தை கண்டறிந்த '**மேடம் கியூரியம்மையார்**', ஒரு பணக்காரியின் வேலைக்காரியாக இருந்தார். உலகிலேயே ஒப்பற்ற செல்வரான '**ஹென்றி ஃபோர்டு**', ஓர் ஏழை உழவரின் மகன்; இளமையிலேயே வீட்டை விட்டு ஓடிப்போய் எதிர்பாராத இன்னல்களையெல்லாம் சந்தித்த அவர் மூளையில் உதித்தவையே இன்று சாலைகளிலே பரபரப்பூட்டும் மோட்டார் வண்டிகள்.

மண்ணெண்ணெய்க் கிணறு தோண்டி, எண்ணற்ற அளவில் செல்வம் படைத்தவர் '**இராக்ஃபெல்லர்**'. வையகமே என்றும் மறக்க முடியாத அளவு அறவாழ்வு வாழ்ந்தவர் அவர். ஆனால் அதே இராக்ஃபெல்லர் தான் முதலில் உருளைக்கிழங்குகளை வெட்டிக் காய வைக்கும் வேலையில் பணியாற்றி வயிறு காய்ந்து விடாமல் பார்த்து வந்தார்.

தத்துவ நூலின் தந்தை '**சாக்ரடீஸ்**', கோழிக்குஞ்சு களைக் கடன் வாங்கிக் காலங்கழித்தவர்; இறக்கும் போது கூட, தன்னை நெருங்கியவர்களிடம் தான் கடன் வாங்கிய கோழிக்குஞ்சைத் திருப்பித் தந்து விடுமாறு வேண்டிக் கொண்டிருக்கிறார்!

செகமெலாம் ஏற்றிப்போற்ற, ருஷ்ய நாட்டின் மாபெரும் தலைவனாக விளங்கிய '**ஸ்டாலின்**', அன்றாடம் செருப்புத் தைத்துக் காலந்தள்ளிய ஓர் ஏழைக்குத்தான் மகனாகப் பிறந்தார்!

'மூலதனம்' என்ற அரிய பொருளியல் நூலை அளித்த '**காரல்மார்க்ஸ்**', செல்வத்தில் புரண்டெழுந் தவர்கள் மத்தியில் பிறந்து இந்தச் சிறந்த நூலை எழுத வில்லை; அவரும் மிகமிக எளியவரின் குடும்பத்தில் வந்தவர்தான்!

நாற்றமில்லாத வெங்காயமும், முள்ளில்லாத ரோசாவும் உற்பத்தி செய்ய இந்த நானிலத்திற்குக் கற்றுக்கொடுத்த அறிவியல் மேதை '**லூதர்பர்பாங்**', உணவுக்காகத் தெரு நாயுடன் போராடிய பிச்சைக்காரராக வாழ்ந்தவர்தான்!

இவர்களையெல்லாம் நாம் காணும்போது, என்றோ ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகளுக்கு முன் எடுத்துச் சொல்லிச் சென்றாரே, நம் வள்ளுவர், அவர்சொற்கள் நினைவுத் திரையில் மின்னலிடுகின்றன.

**'இருவேறு உலகத் தியற்கை திருவேறு**
**தெள்ளிய ராதலும் வேறு.'**

**— திருக்குறள்.**



# என்று மலரும் அந்தப் புத்துலகம்?



**அவன் பேர் உலகப்பன்!**

கோடானு கோடி காணி நிலங்களுக்கு அவன்தான் சொந்தக்காரன்.

ஆறு கண்டங்களுக்கும், அகன்று விரிந்த ஆழக் கடல்களுக்கும் அவன்தான் அதிபதி.

'படைப்பாளன்' என்பவன் இவன் தந்தை!

பிறக்கும்போதே இவ்வளவு சொத்துக்களையும் திரட்டிவந்த உலகப்பனின் பண்ணையோ மிக மிகப்பெரியது.

எத்தனை எத்தனை நன்செயும் புன்செயும் அவன் பெயர்ப்பட்டாவில் அடங்குகின்றன என்பது உலகப்பனுக்கே நினைவில்லையாம்!

குளம் பிறந்தால் குதிக்கும் மீன்களும் முளைப்ப தில்லையா?

உலகப்பனின் பேரரசுப் பண்ணையில் உழவர் சிலர் தோன்றினார்கள்.

எல்லோரும் எல்லாவற்றையும் சரிசமமாகப் பெற்று இனிமையாக வாழட்டுமே என்று, தம் கழனிகளை அவர்களுக்குக் குத்தகைக்கு விட்டான் உலகப்பன்.

குத்தகை விடும்போது, எல்லோருக்கும் எல்லையைக் குறிப்பிட்டு, குழப்பம் ஏதுமில்லாமல் வயல்களைச் சமமாகப் பங்கிட்டுக் கொள்ளுங்கள் என்று கூறினான் பண்ணைக்குச் சொந்தக்காரன்.

'படைப்பாளன்' என்னும் பாட்டன் 'குத்தகைக் காரர்கள்' என்கிற பேரர்கள் எல்லோருக்கும் சமமாகத்தான் இரு கைகளைப் படைத்தான்; ஒரே வாயைப் படைத்தான்; ஒரு நாளைக்கு எல்லோருக்கும் மூன்று முறை பசிக்கும் வயிற்றைப் படைத்தான்.

இவ்வளவையும் சமமாகப் படைத்த 'படைப்பாளன்', 'பேராசை' என்கிற வஞ்சகப்பொடியை சிலர் நெஞ்சில் தெரியாமல் கொஞ்சம் விதைத்து விட்டான்.

விளைவு...?

குத்தகைக்காரர்களுக்குள்ளே 'குத்து வெட்டுகள்' உருவாயின ; கழனிகளில் பயிர் மட்டும் விளைய வில்லை; 'களரி'களும் விளைந்தன.

எத்தனைக் குத்தகைக்காரர்கள் இருந்தார்களோ, அவர்கள் எல்லோருக்கும் இருக்கிற வயலைச் சமமாக அளந்து, வேலி கட்டித்தர உலகப்பனுக்கு எண்ணமில்லை; படைப்பாளனுக்கோ ஓய்வில்லை.

'எல்லோருக்கும் மூன்று வேளைதானே பசி எடுக்கப்போகிறது. எல்லோரும் நூறாண்டுகளுக்கு மேல் வாழவாப் போகிறார்கள்? ஆகவே குத்தகைக்காரர்கள் ஒதுக்கப்பட்ட நிலத்திற்குமேல் சுரண்டி என்ன செய்யப்போகிறார்கள்?' என்று மேற்கண்டவர்கள் மதமதப்பாக இருந்துவிட்டார்கள்.

ஆனால் குத்தகைக்காரர்கள் நெஞ்சிலே குடியேறி விட்ட ஆசைப்பேய் ஆரவார நடனமாடிற்று.

அவர்கள் வரம்பை மீறினார்கள்.

வரப்புகள் மாறின.

வேலிகள் தகர்ந்தன.

முறை பிறழ்ந்தது.

கைத்திறனும் வாய்த்திறனும் கொண்ட மோசக் குத்தகையாளர் சிலர், கண்மூடிக் குத்தகையாளரின் நிலங்களைப் பறித்துக் கொண்டார்கள். எல்லோரும் நிலமுடையோர் என்ற நிலை மாறிற்று.

சிலரிடம் மட்டும் 'நிலப் பிரபுக்கள்' என்ற பட்டம் ஓடி வந்து ஒட்டிக் கொண்டது.

ஓட்டாண்டிகள் சிலர் 'கூலிக்காரர்கள்' என்ற முத்திரை குத்தப்பட்டு ஒதுக்கப்பட்டார்கள். அவர்கள் 'நிலமற்றவர்கள்' மட்டுமல்லர்; 'நாதியற்றவர்கள்' என்ற பெயருக்கும் சொந்தக்காரர் ஆனார்கள்.

'பெட்டி' என்றும், அதிலே கலகலவென்று சிரிக்கும் 'காசு' என்றும் புதிய சீதனங்கள் உருவாயின.

'சீமான்கள்' என்ற இனம் இவற்றிற்குச் சொந்தமாயிற்று; 'ஏமாளிகள்' என்ற இனம் அவர்களின் கீழே நின்று பல்லிளிக்க ஆரம்பித்தது.

ஒருபுறம் மதுச்சாற்றிலே நீச்சலிட்டு, பழச்சாற்றிலே கைகழுவும் கூட்டம் உருவாயிற்று.

மறுபுறம், எச்சில் இலையொன்று காற்றிலே பறந்தால், நாய் அதை விரட்டும் போது, நாயுடன் போட்டியிட்டு இலையைத் துரத்தும் ஒரு கூட்டம் பிறந்தது.

'மேட்டுக்குடி' ஒருபுறம் மேலே வளர்ந்தது.

வாட்டும் வறுமைத் தேள் கொட்டப்பட்டு, 'தாழ்ந்த குடி' என்ற முத்திரை குத்தப்பட்ட ஓரினம், உலகப்பனின் பண்ணையிலே நிறைந்தது.

சிலர் 'மச்சுவீடுக'ளின் சொந்தக்காரர்கள் ஆனார்கள்.

பலர் 'குச்சுவீடு'ம் இல்லாமல் நடைபாதை வாசிகள் ஆனார்கள்.

சோறாக்கிய தாய், சொந்தக் குழந்தைகளுக்குச் சரிசமமாகப் பகிர்ந்து பரிமாறாத காரணத்தால், வல்லாண்மை நிறைந்த பிள்ளைகள், வாய்செத்த குழந்தைகளை ஏய்த்து அவற்றின் சோற்றையும் பிடுங்கித் தின்பதில்லையா?

சொந்தப் பண்ணையில் இருந்த நிலைத்தைக் குத்தகைக்கு விடும்போது, உலகப்பன் எல்லை கட்டி குத்தகைச் சீட்டு எழுதாத காரணத்தால், எத்தர்கள் மொத்த நிலத்தையும் சுருட்டி பூமான்களாக உயர்ந்தார்கள்; ஏதுமற்ற அப்பாவிகளோ மொத்தச் சொத்தையும் எத்தர்களிடம் இழந்து சொத்தைகளாய், ஏமாளிகளாய் மாறினார்கள்.

ஒருபுறம், உண்ட வயிறு சீரணிக்கவில்லையே என்று 'புளியேப்பக்காரர்கள்' குறைப்பட்டுக் கொண்டார்கள்.

மறுபுறம், சிறுகுடலைப் பெருங்குடல் தின்கிறதே என்று, 'பசியேப்பக்காரர்கள்' பரிதாபக்குரல் எழுப்பினார்கள்.

'படைப்பாளன்' என்ற பாட்டன், படைத்ததோடு தன் பங்குப்பணி முடிந்தது என்றிருந்தான்.

'உயரப்பர்க'ளின் ஆதிக்கம் உயர்ந்து கொண்டே வந்தது. ஒரு நாள் 'ஓடப்பர்க'ளின் பெருமூச்செல்லாம் எரிமலையாக வெடித்தது.

முடிவு ...?

புரட்சி பூத்தது.

உழைக்காமலே மற்றவரின் இரத்தத்தை உறிஞ்சும் மூட்டைப்பூச்சிகளாகச் சிலபேர் வாழ்வானேன்?

காலமெல்லாம் ஓடிஓடி உழைத்து, மற்றவர் பயன் பெறத் தேடிச்செல்லும் தேனீக்களாய்ச் சிலபேர் மாள்வானேன்?

இந்த எரிமலைக் கேள்விகள் வெடித்தன.

மூட்டைப்பூச்சிகளின் வயிற்றைக் கிழிக்கத் தேனீக்களின் கூட்டம் முற்றுகையிட்டன.

'ஏதுமற்றோர்' என்ற பலர், 'எத்தர்கள்' என்ற சிலரைத் தேடித்தேடிச் சாடினார்கள்.

சதைமலை உடலங்கள் மீது உதைகள் சடசடவென்று விழுந்தன.

'ஓடப்பர்க'ளின் கூட்டம் 'உயரப்பர்க'ளை ஓடஓட விரட்டிற்று.

'ஓடப்பர்' எல்லாம் 'உதையப்பர்க'ளாய் மாறியதால், உயரப்பர்கள் கதிகலங்கிப் போனார்கள்.

ஆதிக்கக் கோட்டைகள் மளமள வென்று சரிந்தன.

'எல்லோருக்கும் எல்லாம்' என்ற புரட்சிக்குரல் உலகப்பனின் ஆட்சிபுரி முழுதும் எதிரொலித்தது.

வேடம் போட்ட உயரப்பர்களின் விலாஎலும்புகள் நொறுக்கப்பட்டன.

'ஏமாந்த காலத்தில் ஏற்றம் கொண்டோர்', காலப் புரட்சியால் கதிகலங்கிப்போய், ஏழையப்பர்களின் காலடிகளில் ஓடிவந்து வீழ்ந்தார்கள்.

படைப்பாளனும் உலகப்பனும் செய்யத் தவறிய பணியைப் 'புரட்சியாளன்' ஒரு நொடியில் செய்து முடித்த அற்புதம் நிகழ்ந்தது.

வயல்களின் பழைய வரப்புகள் மாற்றப்பட்டன.

புதிய பொது வரப்புகள் பிறந்தன. 'எல்லோருக்கும் எல்லாம்' என்ற புதுமை மண்டிய உலகில், 'பொதுமை' ஆளத் தொடங்கிற்று.

ஒடப்பர், உயரப்பர் என்ற இரண்டினம், உலகப்பனின் பண்ணையில் இப்போது இல்லை.

'பொதுவுடைமைச்சோலை'யில் எல்லோரும் 'ஒப்பப்பர்' ஆயினர்.

இப்போது அந்த உலகப்பனின் பண்ணைக்குப் பெயர்தான் 'புத்துலகம்' என்பது.

'ஆடுகின்றாய் உலகப்பா! யோசித் துப்பார்!
ஆர்ப்பாட்டக் காரர்இதை ஒப்பா ரப்பா!
தேடப்பா ஒருவழியை என்று சொன்னேன்;
செகத்தப்பன் யோசித்துச் சித்தம் சோர்ந்தான்;
ஓடப்ப ராயிருக்கும் ஏழை யப்பர்
உதையப்ப ராகிவிட்டால், ஓர்நொ டிக்குள்
ஓடப்பர் உயரப்பர் எல்லாம் மாறி
ஒப்பப்பர் ஆய்விடுவார் உணரப் பாநீ!'

– பாரதிதாசன் கவிதைகள்
(முதல் தொகுதி)



**கவிவேந்தர் கா. வேழவேந்தன் அவர்களின்**

**பிற கனிச்சுவை நூல்கள் :**

(1) நெஞ்சிலே பூத்த நிலா (சிறுகதைத் தொகுப்பு)
(அச்சில்)

(2) வேழவேந்தன் கவிதைகள் ரூ. 60.00

(3) வண்ணத்தோகை ரூ. 60.00
(தமிழக அரசின் பரிசு பெற்ற கவிதைத் தொகுதி)

(4) ஏக்கங்களின் தாக்கங்கள் ரூ. 60.00
(கவிதைத்தொகுதி)

(5) தூறலும் சாரலும் ரூ. 60.00
(கவிதைத் தொகுதி)

(6) தெரிய.. தெளிய... ரூ. 60.00
(வாழ்வியல் கட்டுரைத் தொகுதி)

(7) மனக்காட்டுத் தேனடைகள் ரூ. 60.00
(கட்டுரைத் தொகுதி)

(8) பாட்டருவி ரூ. 100.00
(கவிவேந்தரைப் பற்றிய இலக்கியத்
திறனாய்வுக் களஞ்சியம்)





# இவரைப் பற்றி இவர்கள்

'எங்கள் திராவிட இயக்கக் குடும்பத்தின் இளந்தலைமுறைக் கவிஞர்களில் தலைசிறந்தவர் கவிஞர் கா. வேழவேந்தன். நம் பழம்பெரும் இலக்கியங்களிலிருந்து நயம்செறிந்த பாடல்கள் சிலவற்றைத் தேர்ந்தெடுத்து, அழகுச் சுவையுடன் அவற்றிற்கு அரிய விளக்கம் தந்துள்ளார் இந்நூலில். என் மனத்தை மிகவும் கவர்ந்த கட்டுரைத் தொகுப்பு இது'.

– *முத்தமிழறிஞர்* **கலைஞர்.**

'எளிதில் விளங்காத சில பாடல்களுக்கும் காட்சி விளக்கமும், கருத்து விளக்கமும் தந்து, எளியோர்க்கும் புரியும் வகையில் அற்புத அழகுடன் இந்நூலைப் படைத்திருக்கிறார் கவிஞர் கா. வேழவேந்தன். அவருடைய எழிலார் சொல் நடையில், கொஞ்சும் தமிழ் அடுக்கடுக்காகத் துள்ளி எழுந்து, அருவிபோல் குதித்தோடி வந்து, நம் நெஞ்சமெல்லாம் பரவி நின்று பெருமகிழ்வு ஊட்டுகிறது'.

– *நாவலர்* **இரா. நெடுஞ்செழியன்.**

'இத்தொகுப்பின் ஒவ்வொரு கட்டுரையும், ஒவ்வொரு நற்சுவையை நமக்கு அள்ளி வழங்குகின்றன. இந்நூல் உரைநடையில்தான் உள்ளதென்றாலும், இதன் வனப்புமிகு வாசகங்கள் அமைந்துள்ள முறையினால், இது ஒரு கவிதை நூலோ என்று மயங்க வைக்கின்றது. எதிர்காலத்தில் புகழ்மிகு பெருங்கவிஞர்கள் வரிசையில் கவிஞர் கா. வேழவேந்தன் வைக்கப்படுவார் என்ற பெரும் நம்பிக்கை எனக்கு என்றும் உண்டு'.

– *சிலம்புச் செல்வர்* **ம.பொ.சி.**